உ

கடவுள்துணை.

# யாகோபு

திருவாய்மலர்ந்தருளிய

# லோகசெந்தூரம் 300

இஃது

மதுரை வித்துவான்

த. குப்புசாமி நாயுடு அவர்களால்

பரிசோதிக்கப்பெற்று

---

மதுரை புதுமண்டபம் புத்தகஷாப்,

இ. ராம. குருசாமிக்கோனார் சன்

அவர்களாற்றமது

மதுரை வடக்குமாசிவீதி குருசாமிக்கோனார் தெரு

ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

(மூன்றாம் பதிப்பு.)

(இதன் விலை) 1936

உ

கடவுள் துணை.

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.

இதனால் சகலமான அச்சுக்கூடத்ததிபர்களுக்கும் புத்தக வியாபாரிகளுக்கும் இன்னு மற்றுமுள்ளவர்களுக்குந் தெரிவிப்பது யாதெனில்:—

இந்த யாகோபு லோக செந்தாரம் முன்னூறு என்னுமிப் புத்தகம் ஓலையேட்டுச் சுவடியிலிருந்ததை போதுமான திரவியச் செலவுசெய்து அச்சிட்டு என்னால் (கெவர்ண்மெண்ட் சட்டப்படி) ரிஜிஸ்தர் செய்திருப்பதால் இச்சாஸ்திரத்தைப் பிறர் எவ்விதத்திலும் அச்சிடக்கூடாதென்பதை இதன்மூலம் தெரிவித்துக்கொண்டேன்.

இங்ஙனம்,

இ. ராம. குருசாமிக்கோனார் மகன்,
கு. இராமசாமிக் கோன்,
புக்ஷாப் புதுமண்டபம்,
மதுரை.

உ

கடவுள் துணை.

# லோக செந்தூரம் 300 ரின் அட்டவணை.

## லோகசெந்தூரம் 300-ரின் அட்டவணை.



அட்டவணை முற்றிற்று.



உ

பரமபதி துணை.

# யாகோபு திருவாய்மலர்ந்தருளிய

# லோக செந்தூரம் 300.

காப்பு.

அயிலாசக் கணபதிதன் றாள்பணிந்து
    கனகமயி லேறுமுரு கனையும்போற்றி
அயிலமெல்லாம் நிறைந்திருந்த அம்மன்பாதம்
    அடுத்துநின்ற பரமசிவன் பாதந்தன்னை
ஓயிலாகத் துதிசெய்து மனதுள்வைத்து
    ஒழுங்காக எழுநூற்றைச் சுருக்கியானும்
குயில்போலே பாடினேன் முன்னூறு தன்னில்
    கொட்டினேன் வாதவயித் தியமுந்தானே. (1)

ஆகுவா கன்மேறுஞ் செல்வன்றன்னை
    அடுத்துகெஞ்சி லுருதிசெய்து முனிநூல்பார்த்து
பாகுவாய்ச் சோதித்துப் பாகந்தன்னைப்
    பார்த்துமே ஆயிரமும் பாடினேன்யான்
வாகுபெற அதைச்சுருக்கி எழுநூறுபாடி
    வகையாக அதைச் சுருக்கி முன்னூறாக
யாகோபென்ப் பேராகிப் பாடினேன்யான்
    அடுத்துமே பெரியோர்களருளாற்றானே. (2)

## சுக்கான் கல்லுச் சுண்ணம்.

சுக்கான கல்லெடுத்துப் பாண்டத்திட்டுச்
    சுத்திசெய்யப் பூநீரு மரக்காலாறு
மிக்கான கற்சுண்ணம் பூநீருநேரே
    மிகவளர்ந்து விட்டுடனே பாணிரெட்டி
தக்கவிட்டு அடுப்பேற்றி யெரித்து நன்றாய்த்
    தனையெடுக்கக் கல்லெல்லாங் கட்டிப்போகும்
சொக்கயெடு புறம்பாக வைக்கச்சொன்னார்
    சுத்தியுள்ள முறையாகும் பாகந்தானே. (3)

நல்லாகக் கட்டினதோர் சுக்கான் றன்னை
நாடியே பத்தைந்து கரியில் வைத்து
மெல்லவதை நாள்மட்டும் உரைக்கவூது
மீறியது கடுஞ்சுண்ண மாயிருக்கும்
வல்லமையாய்க் கல்லெல்லா மூதித்தானே
வகைபெறவே யெடுத்துமண் பாண்டத்திட்டு
சொல்லரிய சவுக்கார நீருதன்னைச்
சுருதிதனில் யாகோபு சொன்னவாறே.

உப்பு.

புண்டரிக யிலைகொய்து மேஷத்தோலிற்
போட்டுவைக்கச் சந்திரன்முன் சலமும்ரெம்பும்
கண்டவுட னெடுத்துசவுக் காரநீரில்
காட்டியிடு ஒட்டிரெட்டி பனிநீர்ரெம்ப
கொண்டுஅதை மண்டலத்தில் மூடிவைத்துக்
குற்றமறப் பார்க்கவுப்பு மேலேவந்து
நின்றவுடன் வழித்தெடுத்துப் பீங்கானிலிட்டு
நிர்ணயமா யாகோபு நிசஞ்சொன்னாரே.

வழலை உப்புச் சுண்ணம்.

படர்ந்தொரு உப்பைவழி கல்வத்திட்டுப்
பதியவரை வெண்கருவால் வில்லைதட்டி
அடர்ந்தகதிர் முன்வைத்து ஊதிப்போடு
அதுகடுமை யாகிவிடும் வழலைச்சுண்ணம்
தொடர்ந்துயெடு புறம்வைத்துச் சீனந்தன்னைத்
தூக்கியெடு சேரிரண்டு சட்டிதன்னில்
வடர்ந்தபிண்டச் சுண்ணநீர் பாதியிட்டு
வண்மைபெறப் படிகார மதின்மேல்வையே.

சீனச் சுண்ணம்.

காரம்வைத்துக் கிளிஞ்சிநீர் பாதியிட்டுக்
கணக்குடனே யதையமுழ்த்தி மேலேதானும்
பாரம்வைத்து அடுப்பிலிட்டுக் கடுமையாகப்
பத்திரண்டு சாமம்தீ யெரித்தெடுக்க
கோரமதாய்ப் பொங்கியது உண்டைபோலாங்
குறித்துயெடு கல்வமிட்டுப் பின்புநீயும்
நேரமதாய் வெண்கருவு மெருக்கம்பாலும்
நேராக விட்டுநிழல் வைத்துக்கேளே.

திரிநாள்வைத் தெடுத்திருத்துச் சீனந்தன்னில்
 இட்டமதாய் விட்டரைத்து வில்லைதட்டி
குரியான கதிர்முன்னே வைத்தெடுத்துக்
 குணமாக அணலில்வைத் தூதநீறும்
ஆரிவாலே யெடுத்துக்கல்வ மிட்டுநேரே
 ஆதிசவுக் காரமிட்டு அரைமுன்னீரால்
சரியாக அரைத்துவில்லை கதிரில்வைத்துச்
 சத்தியமா யஞ்சுசுண்ணம் மேலேகட்டே.

சவுக்காரச் சுண்ணம்.

கட்டியங்கி தன்னிலிட்டுக் கவசந்தள்ளிக்
 கணக்காகப் பிரித்திடவே தந்தம்போலாம்
கொட்டியதேள் போலாகுஞ் சவுக்காரந்தான்
 கொங்கணரு முனிவோருஞ் சித்தர்தாலும்
கெட்டியாய் மறைத்துவைத்த புதுமைதன்னைக்
 கீர்த்திபெற இந்நூலிற் சொன்னேன் யானும்
கட்டியாய்ப் போகாது வழலைச்சுண்ணம்
 நாடியே யாகோபு நலஞ்சொன்னாரே

அரிதாரச் சுண்ணம்.

பொய்யாது சவுக்காரச் சுண்ணந்தன்னைப்
 புகலரிய பலம்நிறுத்து வீரங்காலாம்
மெய்யாக அரைக்கருவுந் தெளிந்தநீரில்
 மேன்மைபெற மடலினிய அரிதாரத்தை
வையகத்தி லாட்டமுரி சுருக்குத்தாக்கு
 வகையாகச் சுத்திசெய்து பின்புநீயும்
கையாகச் சவுக்கார மேலேகட்டிக்
 †காடையிட அரிதார நீறுமாமே.

துருசுச்சுண்ணம்.

மடலினிய அரிதாரஞ் சுண்ணமாகும்
 மாட்டியெடு கல்வமிட்டு வீரங்காலாம்
திடமினிய கல்வமிட்டு அரைமுன்னீரால்
 தெளிவரைத்து துருசின்மேற் கட்டியங்கி
புடமிட்டு நீலனையே யெடுத்துப்பாரு
 போக்கோடே பசுப்பில்லைப் பொன்போலாகும்
கடகடென நடந்துவிடுஞ் சூதந்தன்னைக்
 கட்டிக்கரி தனிலாடுஞ் சூதந்தானே.

ஏமவித்தை.

சூதத்தைக் கட்டிக்கரி தன்னிலாடுஞ்
சுயம்பான வாதமொடு வயித்தியமாகும்
வேதத்திற் சொன்னதுதா னிந்தமார்க்கம்
வெற்றிதருந் தாளகத்தை நீற்றுமார்க்கம்
பாதமது நடத்தாமற் பண்ணிவிக்கும்
பலிப்பாகும் யெல்லாமுஞ் சித்தியாகும்
காதமது நிமைக்குமுன்னே ஓடலாகும்
கருத்தாக யாகோபு சொன்னவாறே.

கட்டியதோர் சூதத்தைக் குகையிலிட்டுக்
கனிந்துநின்று உருகையிலே நாலிலொன்று
விட்டிடுநீ யேமமது நாலிலொன்று
விதமிடை நாகமிடு உருகுமெல்லாம்
எட்டியே எட்டுரெண்டில் நூற்றென்றிட்டால்
இனிதான யேமமாம் நல்லவித்தை
செட்டிகையி லேறுமிது வித்துநீயும்
சித்துபெறச் செலவுசெய்து ஞானம்பாரே.

தொனியான ஞானமது விளங்கச்சொன்னேன்
சூட்சமதை யறிந்துநீ செய்துகொள்ளு
முனிவோர்க ளிப்படியே யிருந்துநல்ல
முறைகண்டார் புத்தியில்லார் கருத்திலுள்ளோ
இனிதான பொருளாசை யதனாற்றர்மம்
ஏழைகளுக் கீயாம லீனமாக
அனியாயஞ் செய்தாக்கால் வருமோவர்தம்
அமடுபடு வாரென்றார் யாகோபுதானே.

தாம்பூரச் சுண்ணம்.

சுத்தியுள்ள தாம்பூரந் தகடதாக்கிச்
சுருதியுள்ள சூடனிடை கண்டதிப்பிலி
நத்தியரை அருக்கன்பால் மூரிந்தநீரால்
நாடியிடு செம்பின்மேற் கவசங்கட்டி
சுத்தியதாய்ப் புடம்போட்டுக் கவசம்நீக்கிச்
சொகுசாக யெடுத்துப்பார் வெட்டையாகும்
சத்தியமா யெடுத்துகுழிக் கல்வமிட்டுச்
சலுதிபட வரையெனயா கோப்சொன்னாரே.

கடுமையுள்ள தாம்பூர வெட்டை தன்னைக்
கல்வமிட்டு யிடைசேரு சீனச்சுண்ணம்
அடுமைபெற வெண்கருவா லரைத்துச்சாமம்
அதையெடுத்துக் கதிர்முன்னே காயவைத்து
நடுமையம் வைத்துச்சர உலையிலூது
நலமாக பூவேழு தரத்தில்நன்றாய்
தடுமாறாத் தங்கம்போற் சுண்ணமாகும்
தாட்டிகவான் யாகோபு சொன்னவாறே. (16)

நல்லசெம்புச் சுண்ணமதை நாவிலிட்டால்
நல்கிடுமே குன்மமெட்டும் வாங்கிப்போகும்
கொல்லவந்த கூத்தனுமே அஞ்சிநிற்பான்
குணமறிய வாதமெல்லாங் குடிவிட்டோடும்
சொல்லரிய பற்பத்தால் வெகுநோய்போகும்
சூட்சமுள்ள தாம்பூர பற்பந்தன்னை
வல்லமையா யுண்டவர்க்கு மகத்தாஞ்சித்தி
வையகத்தில் யாகோபு வகைசொன்னாரே. (17)

அயச் சுண்ணம்.

நல்லிரும்பு ஓரிடையாங் காந்தம்நேராய்
நாடியரை வாழையுட கிழங்குச்சாற்றால்
மெல்லவே வில்லைகதிர் முன்னேவைத்து
மேன்மைபெறச் சரவுலையில் வைத்துஊது
முல்லைமலர் போலாகும் நிறமுந்தானும்
மூவாறு தரந்தனிலே முத்துப்போலாம்
வல்லமையாய்ப் பொன்பணம்போ லுண்டுபாரு
வையகத்தில் யாகோபு வகைசொன்னாரே. (18)

இரும்புவெள்ளை திரிகடுகி லிருநேரங்கொள்
எடுத்தபிணி தசவாய்வு யேங்கியோடும்
துரும்புபோ லிருந்தவுடல் தூணதாகும்
துப்பரவாய் விந்துகட்டுந் தாதுவெல்லாம்
விரும்பியந்த விருகண்ணுஞ் சிவப்பாய்க்காணும்
வெற்றிதரு முடலழுத்த மிகவுண்டாகும்
நரம்புகளு மலர்வாச மேனியாகும்
நாதாந்த யாகோபு நாடினாரே. (19)

செம்புருக்கி அயப்பற்பம் நூற்றிலொன்று
சேர்த்திடவே காஞ்சனமாம் செய்கைமெத்த
தெம்புடனே ஞானத்தை மிகவும்பார்த்து
திடமாக உறுதியாய் இருந்துநன்றாய்
தும்பமறச் சுருதிநூ லறிந்துதேரு
துப்பரவாய்க் காயசித்தி நலங்கப்பண்ணும்
வம்புபடா திருவென்று யாகோபு சொன்னார்
வகையாக அயப்பற்ப முண்டுதேறே. (20)

திரிவங்க செந்தூரம்.

திரிவங்கம் பலம்நேராய்க் கரண்டியிட்டுத்
திட்டமதா யுருக்கியன்ன பீநிற்சாய்த்து
அரிவாகக் குகையிலிட்டு காலத்தொன்று
அரன்பிஷ மிட்டுநல் லெண்ணெய்யூற்று
பிரிவாகப் பார்த்தெடுத்து ஆரவைத்துப்
பிசகாமல் கல்வமிட் டுடைத்துநீயும்
சிரியவய துள்ளபிள்ளை போடும்பாக்குச்
சிறக்கயிடி வெற்றிலைநேர் சேர்த்துக்கொள்ளே. (21)

சேர்த்துயிடி சுண்ணமிட்டு யிடித்துநைசச்
சிவப்பாகும் பிழிந்தெடுத்துச் சீசாதன்னில்
பார்த்துவிட்டு அரைத்துவில்லை கதிரில்வைத்துப்
பக்குவமாய் மூன்றுபுடம் போடச்செம்பாம்
நேர்த்தியதாய்ப் புரம்வைத்துத் தாரந்தன்னை
நிர்ணயமா யெடுத்துக்கச டகற்றிநன்றாய்
சார்த்திடுவீர் திரிவங்கம் நாலுக்கொன்று
சாரித்துச் சேர்த்துமுன் னீராலாட்டே. (22)

ஆட்டிவில்லை கதிரில்வைத்துப் புடமுமொன்று
அடைவாகப் போட்டுயெடு சிவக்கும்நன்றாய்
தாட்டிகமா யெடுத்துரவி நாற்பதுக்கொன்று
தாக்கிடவே காஞ்சனமாம் பணமவ்வீதம்
கூட்டியுண்ணச் சயகாசம் வெட்டைமேகம்
குணமாகும் வாதமுதல் மூலமெல்லாம்
நாட்டினிலே யில்லாமற் கடலேபுக்கும்
நாதாந்த யாகோபு நவின்றார்தாமே. (23)

சூதமுதற் பதினெட்டுஞ் சேர்ந்துபோகும்
சொற்பெரிய மகோதரங்கள் சொல்லாதோடும்
ஆலைதனில் முரிந்தாசம் போலேயாகும்
அமடுபடு மனதையெல்லாம் பற்றுநீங்கும்
காலைதனி லிருள்கண்ட கலைபோலாகும்
கனிந்துநின்ற பவுந்திரங்க ளகன்றுபோகும்
வேலைகடல் நீர்தனிலே ஒழிந்துநிற்கும்
வேதாந்த யாகோபு விளம்பினாரே. (24)

திராவகம்.

படைதூரத்து¦மோசனது பலமும்பத்து
படிகாரம் பலம்பத்து யிருபத்¦தஞ்சுமாகும்
கடையான கல்லுரலி லிட்டுமெள்ள
கலந்துபிடி தூளாகும் கலையத்திட்டு
நடைபெறவே வாலையொடு மூடிச்சீலை
நன்றாகச் செய்துகதிர் முன்னேவைத்து
விடையேரி நிலைபோலே யெரிக்கவெண்ணீர்
வீழ்ந்துவரும் பிடித்துஅதை வீசிடாயே. (25)

வெள்ளைநீர் தள்ளியே நடுநீர்தன்னை
விரும்பியெடு சீசாவி லடைத்துநீயும்
துள்ளவே கடைநீரைப் பிடித்துவைத்து
துடியாக யிந்நீரின் மகிமைதன்னை
கொள்ளவே நடுநீரி லிங்கமிட்டுக்
குழியாக விட்டுஅரை ரசமடங்கும்
தள்ளாதே கடைநீரு யிரதம்பூக்கும்
தாட்டிகவான் யாகோபு சொன்னவாறே. (26)

வாலைரசம்.

சாதிலிங்கஞ் சேரிரண்டு கல்வத்திட்டுச்
சாதித்து நடுநீராற் சாமமாட்டு
வாதியெடு மண்பீங்கான் தன்னிலிட்டு
வருந்தலதயும் ¦உமிநெருப்பில் நீர்சுண்டத்தான்
சோதினையாம் கலசமிட்டு அதற்குமேலே
சுகமாக மேற்கலச மூடிச்சீலை
பாதிநடு வரையிவிடு சீலைமண்ணைப்
பக்குவமா யெரிரசமாம் பகர்ந்தேன்யானே. (27)

வாலைரசப் பதங்கம்.

எரியிட்ட லிங்கரசம் பலமும்நாலு
எடுத்துநிறு புறம்பாக வைத்துநீயும்
கூரியெடு கல்லுப்புப் படியும்நாலு
கொட்டியே சட்டியிட்டு வருத்தெடுத்து
வாரியிடி செங்கல்மா படியுமொன்று
வகையாக யிரண்டுமொன்றாய்க் கலந்துநன்றாய்
பரப்பியே சட்டியிட்டு அழுழ்த்திநன்றாய்ப்
பதியநடு வரைதனிலே குழியாய்ப்பண்ணே. (28)

பண்ணியிடு குழியதனில் ரசமுமிட்டுப்
பதியவதின் மேல்மூடி யுளுந்துச்சீலை
நண்ணியிடு கெட்டியாய்ச் சீலைசெய்து
நாட்டிடுநீ அடுப்பதனில் யேற்றிமெள்ள
தன்னிழல்போ லெரித்துயெடு நாழி நூறு
தடையறவே யேறியது பற்பமாகும்
கண்ணிமைபோல் மயிர்க்குச்சி தன்னாற்றுனே
கருதிவழி யாகோபு சொன்னவாறே. (29)

நாகரசப் பஸ்பம்.

சிறுகண்ணு நாகத்தைக் கரண்டியிட்டுச்
சிறுகயெரி உருகுமது யெட்டில்ரெண்டு
வேறுவினை வாராமல் ரசத்தையூற்று
வீரிடுமே யெடுகல்வ மிட்டுக்கேளு
பாருலகிற் படைராஜ னிடையேசேர்த்துப்
பதியவரைப் பொடியாக்கிச் சாமமொன்று
காருலவு நாகவல்லிச் சாற்றாலாட்டிக்
கதிர்முன்னே வில்லைதட்டிக் காயப்போடே. (30)

காயவைத்துப் புடம்போட்டு யெடுத்துப்பாரு
கனகமுள்ள பற்பமதைக் கல்வத்திட்டு
மாயவே முன்சாற்றா லரைத்துநீயும்
வளமாக முன்போலே புடமுமிட்டு
சாயவே யெடுத்துவிடு வன்னிபற்பம்
சரியாகச் சேர்த்து அன்ன மிட்டுஆட்டி
ஞாயமாய் வில்லைதட்டிக் கதிரில்வைத்து
நாட்டியிடு கடந்தனிலே வைத்துமூடே. (31)

மூடியதைச் சீலைசெய்து சாமம்ரெண்டு
முக்கியமா யெரித்துயெடு பிரித்துநன்றாய்
ஒடியே மேலேறும் வழித்துநீயும்
உண்மைபெற அடிதனிலே நின்றநாகம்
தேரியே பற்பத்தோ டரைத்துவில்லை
செங்கதிரிற் காயவைத்துத் திறமாய்நன்றாய்
சாரியே முன்போல யெரித்துவாங்கு
சரியாக யாகோபு சாற்றினாரே. (32)

இப்படிக்கு ஐந்துதர மெரிக்கநன்றும்
ஏறாமல் அடியில்நிற்குந் தாருசிற்செம்பு
முப்படிக்குக் கொடுத்துவிடு நூற்றுக்கொன்று
முனைபெருகிக் காஞ்சனமாம் பணமவ்விதம்
தப்பறவே கொடுத்துவிடு வெல்லந்தன்னில்
தக்கவிஷ பேதியெல்லாந் தகர்ந்துநன்றாய்
துப்பரவாய்த் தீர்ந்துவிடும் நபியாம்யாகோப்
சொல்லியதோர் நாகபற்பச் செயலுமாமே. (33)

உதிரத்திற் சூலிகா சோகைமாலை
உற்றுநின்ற பாண்டுவொடு மகோதரங்கள்
குதந்தன்னி லிருந்துவிடு மூலமெல்லாம்
குடிபோகுங் குன்மங்க ளெட்டுந்தானும்
நிதமுண்ணு முதிரவலி காபிச்சூலை
நிர்ணயமாய் நின்றுவிடும் நீர்ச்சுரப்பு
பதகாத்தி லெலும்புகளு முருக்குமேறும்
பாலித்தார் யாகோபு பரிவாய்த்தானே. (34)

முத்திதரும் நாகபற்பம் வைத்துக்கொண்டு
முனிந்துகுரு பத்தியமாய்ப் புளிப்புத்தள்ளி
பத்தியதாய் நாளேழு உண்டபின்பு
பதிவான முத்தெண்ணெய் ஸ்நானம்பண்ணி
புத்தியினால் நசைதீர்ந்து போகும்பாரு
போக்ஷேடே பிழைப்புகள்தான் மிகவுண்டாகும்
சுத்தியமா யிம்மருந்து செய்துகொள்ளு
சரியாகும் யாகோபு சொன்னார்தாமே. (35)

கருவங்கச் செந்தூரம்.

காரீயங் கரண்டியிட்டு உருக்கிநன்றாய்ப்
களக்கஅன்னத் தன்னிலிடு மூவேழ்தரமும்
பாரியா யெடுத்துஅதை நையத்தட்டிப்
பதிவான கல்வமிட்டுச் சேர்தாளென்று
வீரியமா யரைத்துஅன்னத் தன்னாலாட்டி
விருதுபெற வில்லைதட்டிக் கதிரில்வைத்து
மூரியிரு பெரியபுடம் போட்டெடுத்து
முத்திபெறக் கல்வமிட்டு அரைத்துக்கொள்வீரே. (36)

வீர ரசம்.

அன்னத்தா லரைத்துவில்லை கதிரில்வைத்து
அடவாக யிப்படிக்கு புடமுமாறு
தன்னொத்துச் சத்தில்லா திருக்குநன்றாய்
தருகயெடு புடம்வைத்து யின்னங்கேளு
நன்னயமாய் வீரமது சேர்தாளென்று
நாட்டியே நல்லிரும்புப் பொடியும்ரெண்டு
கன்னலது கல்வமிட்டு அரைமூன்நீரால்
கருதரிய ரசமாகுங் கருத்துள்ளோரே. (37)

மிகக்கருத்து வைத்துயிதைப் பாகமாக
மேதினியில் மனிதருண்ணு முப்புநாலு
செகம்படைப்புச் சட்டியிட்டு வருத்துநன்றாய்
செயமான செங்கல்மா வொன்றுகூட்டி
துவைபடவே உரலிலிட்டு யிடித்துநையத்
துடியான சட்டிநிறை யிட்டழுத்தி
அகப்படவே குழிநடுவாய்ப் பண்ணிவீரம்
அன்பான ரசமிட்டு மேலேமூடே. (38)

வீரரசப் பதங்கம்.

மூடிசட்டி வரையிட்டுச் சீலைமண்ணை
முடியவிட்டுக் கெட்டிபண்ணி அடுப்பிலேற்றி
வரட்டிவிற கதுபோடு கமலத்தீயாம்
வகைபெறவே யெரித்திடுநீ நாழிநாலு
ஓடியது மேலேறும் பதங்கபற்பம்
ஒழுங்காகு மெடுசுரண்டி வைத்துநீயும்
கோடியிதின் முன்வைத்த வங்கம்நாலு
குணமான வீரபற்பம் பலமும்நாலே. (39)

உலகெல்லாஞ் செயிக்குமுன் செந்தூரத்தில்
உடனேதான் சரியன்னத் தாலேயாட்டி
குலமாக வில்லைதட்டிக் கதிரில்வைத்துக்
குடியான கடமிட்டு மேலேமூடி
நலமாகச் சீலைசெய்து அடுப்பிலேற்றி
நாடியே யிருசாமங் கடந்தபின்பு
பிலமாக வெடுத்துயிந்தப் படியதாகப்
பிசகாம லெரித்திடவே பவளமாமே. (40)

காரீய செந்தூரந் தனையெடுத்துக்
கணக்காக ரவிநூற்றி லொன்றுதாக்க
மீரியது காஞ்சனமாம் பணமவ்விதம்
மிகஅக்தி சந்திமண் டலமேகொள்ள
பாரிலது பலபிணிக ளற்றுப்போகும்
பகாரிது யிந்தமுறை பரிவுமெத்த
மாரிபோ லாகுமிந்தச் செந்தூரத்தை
மதிபெருக உண்டவர்க்கு மகிமையாமே. (41)

கரும்புரச முரித்தகட்டி தன்னிலுண்ணக்
கருத்தில்லா வாதமெல்லாங் கடலேபுக்கும்
இரும்புபோ லாகுமது சலமேகங்கள்
எங்கிருக்கு மேகவெட்டை மூவேழ்போகும்
துரும்புபோ லேயிருந்த மேனிதானும்
தூணாகுஞ் சூலைபதி னெட்டும்போகும்
விரும்பினு லெல்லாமுஞ் சித்தியாகும்
வெற்றிபெற யாகோபு விளம்பினாரே. (42)

நல்வினிய செந்தூரம் வைக்கநல்ல
நாடியிதில் ரசபதங்கம் சேர்ந்தாலப்பே
வல்லமையா யவிழ்தமது வலுத்துநிற்கும்
வடிவாகும் வர்ணங்கள் மிகவுமாகும்
சொல்லினிய காயசித்தி சுருக்கிலாகும்
தொன்மைதரும் ஞானங்கள் மிகவுமுண்டாம்
கல்லினிய தேகமது கற்றூணாகும்
கருத்துணர்ந்து யாகோபு கருதினாரே. (43)

அயச்செந்தூரம்.

நல்லிரும்பு புளியிலைபோல் நையத்தட்டி
நாடியதைக் குகையிலிட்டு நெருப்பாலூதி
மெல்லவிரும் பிடைநாதங் கிராசமிட்டால்
மிகநிறைந்து வெள்ளிபொன்போற் கண்விட்டாடும்
வல்லமையா யாரவிட்டுக் கல்வமிட்டு
வகையாக யிந்திடைக்குப் பாதிவீரம்
கொல்லஅதை விட்டரைத்துப் புகைநீராலே
கூட்டிஅங்கி புடமூன்று போட்டுக்கொள்ளே. (44)

போட்டுயெடு செவ்வல்லி நிறமதாகும்
பூட்டிவிடு குழிக்கல்வந் தனிலேயிட்டு
காட்டியெடு செந்தூர மிடையேவன்னி
நலமான பதங்கமதை நிருத்துச்சேர்த்து
மூட்டுபுகை நீர்தன்னா லரைத்துச்சாமம்
முக்கியமாய் வில்லைதனைக் கதிரிவிட்டு
கூட்டுகட மீதடைத்து யெரிநால்சாமம்
குணமாக யிப்படிக்குத் தாமுமஞ்சே. (45)

அஞ்சுதரம் யெரியிடவே அடியில்நிற்கும்
அடுத்துமெள்ள யெடுத்தூரவி பத்துக்கொன்று
தஞ்சமூரக் கொடுத்திடவே யேமமாகும்
தனையெடுத்துப் பணவிடைதான் தேனிலுண்ணா
கெஞ்சுமது நசலெல்லாங் கடலேபுக்கும்
கீர்த்திஅயச் செந்தூரங் கொள்ளச்சித்தி
பிஞ்சாகிக் காயாகிப் பழுத்தாற்போலே
பிரித்துரைத்து யாகோபு பேசினாரே. (46)

கசடில்லா யிரும்புச்செந் தூரமுண்ணா
கடல்புக்கும் நசையெல்லாங் காணாதோடும்
தசனுளிற் பித்தவெட்டை மேகம்போகும்
தக்கவலி குன்மமொடு சூலைவெட்டை
பிசகிவிடும் நீராம்பல் கவுசைபித்தம்
பேசரிய சிலேற்பனங்கள் மூலவாய்வு
நசையான பிணிபலவும் விக்கல்போகும்
நாட்டமுடன் யாகோபு நலஞ்சொன்னாரே. (47)

இளைத்தவனு மிரும்பையுண்ண வலுமையுண்டு
இருந்திட்ட இராணியாக் கதனைப்போலாம்
தளைத்திட்ட மரம்போலா மேனிதானும்
சந்திரன்போற் குளிர்ச்சியுண்டாந் தேகந்தானும்
களைக்கவொட்டா நரம்பிருகும் போகமுண்டாம்
கரும்பாகும் சுவாசமது யிறுகியேறும்
சளைக்காது மாந்தளிர்போல் மேனியென்று
சாற்றினார் யாகோபு சரியாய்த்தானே. (48)

திரிகடுகுத் திராவகம்.

திரிகடுகு மூவகையாம் படியளந்து
திரமாக உரலிலிட்டு யிடிக்கத்தூளாம்
அறிவுடனே பாணிரெட்டி அளந்துவிட்டு
அதைக்காய்ச்சிப் பாதியதா யிருந்தபின்பு
குறியாகக் கிசாயத்திற் பாதிஓமம்
கொட்டியிடு பொற்றலையும் பலமொன்றிட்டு
சிறிதான கலயமிட்டு மூன்றுநாள்வை
சித்திபெற யாகோபு செப்பினாரே. (49)

கலயமதின் மேல்மூடும் வாலைதன்னைக்
கருதியிடு சீலைமண்தா னேழுசெய்து
சிலைபோலே அடுப்பிலிடு அங்கியிட்டுச்
சிறப்பாக நிழல்போலே யெரித்துப்பாரு
மலையருவி போல்வருங்காண் புகைநீர்தன்னை
வாங்கியடை சீஷாவிற் பின்புநீயும்
விலைகொடுக்கும் பிணியாளர் தன்னைப்பார்த்து
விதமாகத் துட்டிடைதா னுண்ணச்சொல்லே. (50)

நன்மைபடும் பிரமைமுதல் வாயுவெல்லாம்
நாடியே படுமிருமல் நலமதாகும்
குன்மவலி யெட்டுமெட்டுபடுமேகன்றாய்
குணமாகு மசீரணமுந் தாகசோபம்
துன்பமுடன் செரியாமை பிடிப்புயெல்லாம்
தொல்லுலகி லோடிவிடும் புளிப்புத்தள்ளு
வன்மவினை தீருமென்று யாகோபுசொன்னார்
கருமானத் திராவகத்தை வைத்துக்கொள்ளே. (51)

காந்தச் செந்தூரம்.

தகடினிய காந்தமது பலமும்நாலு
தாக்கியெடு குழிக்கல்வ மிட்டுவைத்து
நிகரான காணமது சட்டியிட்டு
நீரைவிடு ஒன்றுக்கு ரெண்டுதானும்
புகலரிய நாலிலொன்றாய்க் காய்ச்சிக்கொண்டு
பூட்டியரை காந்தத்திற் சாமம்நாலு
உகமாக வில்லைகதிர் காயவைத்து
உண்மையுடன் யாகோபு முரைத்திட்டாரே.

மூணுதர மரைத்துமுன்னீர் புடமுமிட்டால்
முனிவாகுஞ் செம்பருத்தம் பூப்போலாகும்
தானுவன்னி பற்பமது விடையேசேர்த்துத்
தாக்கிடுநீ முன்னீரா லரைத்துவில்லை
நாலுவது கதிரில்வைத்துக் காய்ந்தபின்பு
நாட்டியெடு கடமடைத்து மூடிச்சீலை
வானுதலா யெரியிட்டுச் சாமமொன்று
வகையாக மேலேறும் வண்மைதானே.

ஏறிநின்ற பதங்கத்தை அடியில்நின்ற
இதமான காந்தத்திற் சேர்த்தரைத்து
கூறிடுநீ முன்சாற்றா லரைத்துவில்லை
குணமாகத் தட்டிக்கதிர் காயவைத்து
பாரிவிடு கடந்தனிலே யடைத்துமூடி
பதிவாகச் சீலைமண்தா னேழுசெய்து
மூரியெரி யிப்படிக்குத் தரமுமஞ்சு
முயன்றுஅடி தனிலிருக்கு முன்புதானே.

செம்பரத்தம் பூநிறமாஞ் செந்தூரத்தைத்
தேனிலிட்டுப் பணவிடைதா னிருநேரங்கொள்
துன்பமறும் ஆவின்பா லுண்டால்மேனி
துலங்குமது செவ்வலரி நிறமேயாகும்
தம்பமறும் வாயுவெல்லாங் கீழேசாடும்
தடையறவே சிலேற்பனங்க ளொழிந்துபோகும்
ஆம்புவியிற் பேர்விளங்க யாகோபுசொன்னார்
அறிந்துரைத்த காந்தச்செந் தூரந்தானே.

தேனிவிடு குன்மவலி யெட்டுந்தீரும்
திரமுள்ள சூலைபதி னெட்டுந்தீரும்
கூனிடுங்கான் வாதமுத லெல்லாங்கன்றாய்
குணமுள்ள மகோதரமும் பித்தவெட்டை
யோனிகுத்து புத்துகளு மொழிந்துபோகும்
உடல்பெருகும் விந்திறுகும் உறுதிமெத்த
மேனியது பெருக்குமது ரத்தமூறும்
மேன்மையுள்ள யாகோபு உரைத்திட்டாரே; (56)

கெந்தக பற்பம்.

கல்கெந்தி தனையெடுத்துப் பலம்சிருத்து
கருத்துகந்த அருக்கம்பால் தன்னிற்றோய்த்து
நல்லாக யெட்டுநாள் ரவியிலிட்டு
நாட்டியே யெருக்கிலையின் பழுப்பரைத்து
மல்கவிடு கவசமதைக் காயவைத்து
மயமாகக் குக்கிடத்தில் நீருமாகும்
செல்லயெடு யாகோபு சொன்னாரிந்தச்
செயகெந்தி பற்பமதை வைத்துக்கொள்ளே. (57)

பணவிடைதான் மதுவிடு மண்டலந்தான்
பகரரிய குஷ்டமொடு மூலவாய்வு
செணந்தனிலே யொழிந்தோடும் ரத்தமூலம்
சிரசில்நின்ற பிணிசமுஞ் சொல்லாதோடும்
குணமாகுந் தமரகமாம் வாயுபோகும்
கொடும்பெரிய தோலதனிற் படரும்சட்டை
உணர்வாகுஞ் சொரிசிரங்கு போகுமென்று
உத்தமனார் யாகோபு உரைத்திட்டாரே (58)

தாளக பஸ்பம்.

மடவினிய அரிதாரம் பலமும்நாலு
மதிக்கயெடு சுண்ணநீர் தனிலேயிட்டு
திடமாக யெரித்துயெடு சுத்தியாகும்
தீர்க்கமா யெடுத்துஅப்பாற் சொல்லக்கேளு
விடமினிய தில்லம்பால் தன்னிற்றோய்த்து
விட்டுயெட்டு நாள்கதிரிற் போட்டுநன்றாய்
கடமாக யெடுத்துப்பார் கடடிப்போகும்
கருவில்பெரு யாகோபு கருதினாரே. (59)

படிகாரச் சுண்ணம்.

படிகாரம் கரியில்வைத்து ஊதச்சுண்ணம்
பார்த்தெடுத்துத் தில்லைப்பால் தனிலரைத்து
துடியான தாரத்தின் மேலேகட்டு
தூக்கிக்கதிர் காயவைத்துப் பின்புநீயும்
வடிவான வாரணத்தின் புடமுமிட்டு
வகையாக யெடுத்திடவே பற்பமாகும்
மூடியவெடு தாளகத்தின் பற்பந்தன்னை
முக்கியமா யாகோபு முறைசொன்னாரே. (60)

இடைபோகா அரிதார பற்பந்தன்னை
இதமான தேனிலிடு காசம்வாய்வும்
தடைபடுமே சயம்போகும் வாய்வுமாறும்
தப்பறவே மாறிவிடும் தரியாதங்கே
படைமுகத்தி லொப்பாரி யில்லாப்போல
பரிதான நசைக்குஅரி தாரபஸ்பம்
திடமாக முன்னோர்க ளுரைக்கக்கண்டு
தீர்க்கமா யாகோபு செப்பினாரே. (61)

சிங்கிச் செந்தூரம்.

சிங்கியது பலம்நாலு கல்வத்திட்டுச்
சிறக்கவரை வச்சிரத்தின் பாலினாலே
மூங்கவரை இருசாமம் வில்லைதட்டி
முத்திபெறக் கதிரில்வைத்துப் புடமுமிட்டு
தங்கயெடு யிப்படிக்கு அரைத்தரைத்து
தடையில்லாப் புடமூன்று போட்டுக்கொண்டு
மங்களமாய்ப் புரம்பில்வைத்து மார்க்கங்கேளு
மயமான யாகோபு வகைசொன்னாரே.

அரிதார பஸ்பம்.

சுத்தித்த அரிதாரக் கல்வத்திட்டுச்
சுருதிபெறச் சப்பாத்துக் கள்ளிவிட்டு
நத்தியெடு பழச்சாறு விட்டரைத்து
நால்சாம மரைத்துவில்லை கதிரில்வைத்து
புத்தியினால் கிளிஞ்சிநீர் தன்னிலிட்டுப்
புதிதாக யெரித்திடவே சிவந்துநன்றாய்
சுத்தியமா யிருந்திடும் யாகோபுசொன்னார்
சரியாகச் சாதித்தால் தன்மைதானே.

மிருதார சிங்கிபற்பம் பலமுமொன்று
மேன்மைபெற்ற தாளகச்செந் தூரமொன்று
உறுதியாய்ப் பழச்சாறு விட்டுஆட்டி
உத்தமனே யிதையுமே வில்லைதட்டி
செருவமுடன் கதிரில்வைத்துக் காய்ந்தபின்புயக்
கீர்த்திபெறப் பெரியபுடம் போட்டுவாங்கு
பரிதிநிரச் செந்தூர மாகும்பாரு
பகுத்துரைத்தார் யாகோபு பரிவாய்த்தானே. (64)

துருசினுட செம்பதிலே இருபதொன்று
சேர்த்திடவே காஞ்சனமாம் பணமவ்விதம்
வருசையா யுண்டிடவே வெட்டைமேகம்
வகையான நீரழிவு யெரிவுகாந்தல்
பிரியமுள்ள சயரோகங் காசமெல்லாம்
பேர்சொல்ல நாடாது பிரண்டுஓடும்
சரியான பாகமிது செய்துகொள்ளு
சாற்றினார் யாகோபு சரியாய்த்தானே. (65)

வெள்ளை பாஷாணச் சுண்ணம்.

ஒலிகொல்லி தனைநிறுத்துப் பலமும்நாலு
இதமான கல்வமிட்டு அரைத்தில்லம்பால்
வலியவரை இருசாமம் உண்டைபண்ணி
வளமாகக் கிளிஞ்சிநீர்க் குள்ளேவைத்து
சலியாம லடுப்பேற்றி எரிமுச்சாமம்
தாக்கியே முன்போலே யரைத்துஉண்டை
மலியயிடு முன்போலே வைத்துஐந்து
மதியாக யெரித்திடவே கட்டிப்போமே. (66)

கணவிட வோடாது நிறங்குன்றாது
கட்டியிடை போகாது கரியிலாடும்
கினவிடு வெடியுப்புச் சுண்ணநீரால்
நிர்ணயமாய் அரைத்துவில்லை கதிரில்வைத்து
தனமுடனே கிளிஞ்சிநீ ரிதனினுள்ளே
தாக்கிவிட்டு யெரிசாமம் யெடுத்துப்பாரு
உனதுபொருள் பாசாண சுண்ணமாகும்
உண்மையுள்ள யாகோபு சொன்னவாரே. (67)

பாசாண சூதபற்பம்.

வெள்ளைப் பாசாணபற்ப மிடையேசூதம்
விட்டுமே மேற்பதங்க மிடையேசேர்த்து,
துள்ளவரை முன்பாலால் சாமமாட்டித்
துடியாக வில்லைபண்ணிக் கதிரில்வைத்து
மெள்ளவதைப் புடமுமிட்டு யெடுத்துக்கொள்ள
வெண்ணீராய்ப் பொருமியது சுண்ணமாகும்
கொள்ளையையா வெள்ளிவித்தை வெள்ளீயத்தில்
கொடுத்திடுவாய் நூற்றுக்கு ஒன்றுதானே. (68)

வெள்ளீயம் நூற்றுக்கு ஒன்றுதாக்க
விருதுபெற்ற ஓசையா நீரைவாங்கும்
துள்ளியெடு வெள்ளியது பத்துமாத்து
துதித்துநின்று விற்றுவதைச் செலவுசெய்து
தள்ளிவிடு காலமதைப் பின்புநீதான்
தடையறவே ஞானத்தைத் தாக்கிப்பாரு
கொள்ளிசுடும் வாதிக்கும் வெள்ளியாகும்
குணமாகும் யாகோபு குறித்தார்தானே, (69)

பணவிடைதான் பாஷாண பற்பந்தன்னைப்
பார்த்திருந்த முடக்குகின்ற வாதந்தீரும்
சிணந்தனிலே பதினெட்டுச் சூலைபோகும்
சித்திபெரு மகோதரமும் ஆம்பற்கட்டி
குணமாகு மேகமுதல் வாயுவெல்லாம்
கொடுஞ்சுருக்கு குன்மமொடு படுமேகண்டீர்
மணமான பரிமளமாந் தேகந்தானும்
மதிபெருகும் யாகோபு வண்மையாமே. (70)

வெடியுப்புச் சுண்ணம்.

அஞ்சான காய்ச்சல்வெடி யுப்புப்பத்து
அடுத்துநிரு சீனமது கோரய்க்கூட்டி
மிஞ்சாலே கல்லுரலி லிட்டிடித்து
மிரளாம லெலுமிச்சந் தோல்காலிட்டு
நஞ்சாகும் நய்யபிடி பழத்தோல்தானும்
நாடியே உப்போடு மெழுகாய்நிற்கும்
தஞ்சமுட னெடுத்துவில்லை தட்டிநீயும்
சாத்தியதோர் புதுச்சட்டி யடுப்பிலேற்றே. (71)

ஏத்திடுநீ யக்கியிட்டுக் கடுமையாக
எரித்திடுநீ யொருசாமஞ் சென்றபின்பு
பார்த்தெடுநீ மல்லிகைப்பூப் போலேசுண்ணம்
பாகமா யெடுத்துவைத்துப் பீங்கான் தன்னில்
சாத்திடுநீ சுடர்க்கொடியோன் றன்னைத்தானும்
சரிசேர்த்து வெண்கருவாற் தாக்கியாட்டு
ஏத்திடுநீ பொடியாக்கிக் கரியில்வைத்து
இனிதாக வருத்து அதை வில்லைதட்டே. (72)

செயநீர்.

கட்டிகதிர் காயவைத்து ஊதிப்போடு
கருவுற்ற சுண்ணாம்பாங் கருத்துள்ளோர்க்கு
கொட்டியிடு கல்வமிட்டுப் பொடியதாக்கிக்
கூசாமற் காரசாரம் பொடித்துப்பின்பு
தட்டியெடு சீசாவி விட்டுமூடித்
தரமாகப் பூமிக்குள் புதைத்துவைத்து
கெட்டியாய்ப் பதினைந்து நாளைக்குள்ளே
கிருபையுள்ள நீராகும் முறையைக்கேளே. (73)

பாசாண கட்டு.

செயநீரில் வீரமொடு பச்சைப்பூரம்
சிறுகயிடு புனுகிட்டு வைத்துக்கொள்ளு
நயமாக லிங்கவெள்ளைப் பாஷாணத்தை
நாட்டியிடு தாளகத்தைக் கவுரிதானும்
பயமாகச் சுத்திசெய்து முன்பாலாலே
பதியவதைச் சுருக்கிட்டுப் பின்புநீயும்
அயமான கோட்டாலே பிடித்துமெள்ள
அதட்டியே செயநீரிற் தோய்த்திடாயே. (74)

நனைத்துகரி யங்கிதனிற் குமுரவாட்டி
நலமாகச் சாமமொன்று வாட்டிப்பின்பு
கனைத்துமே கிளுஞ்சிநீர்க் குள்ளேவைத்து
காட்டமா யெரியிடுநீ சாமம்நாலு
அனைத்தெடு மறுபடியுஞ் செயநீர்க்குள்ளே
அடவாகத் தோய்த்துமெள்ளக் கரியில்வாட்டு
நினைத்தபடி மறுபடியும் சுண்ணநீரால்
நிலைக்கவெரி யென்றுசொன்னார் யாகோபுதானே. (75)

அடுத்துஎடு எரித்தபின்பு கட்டுமாகும்
ஆண்மையிலதைக் கரியில்வைத்து உருக்கிப்பாரு
தடுத்துநின்று உருகுமது வெள்ளிபோலாந்
தானெடுத்து நிருக்கவறா யிடைபோகாது
கொடுத்துவிடு லோகமெல்லா முருக்கிவிக்கும்
கொள்ளையிது வாதமிது கவரோகோடி
தொடுத்துயிர்த வேதைமுகந் தெரியப்பார்த்தால்
தாயதொரு யாகோபு சொன்னார்தானே. (76)

உப்பதனைச் சுண்ணமது செய்துபின்பு
உறவான பாஷாண மெல்லாங்கட்டும்
தப்பில்லை யிப்படிக்குக் கட்டிநீயும்
தனையெடுத்துக் கொடுத்துவிட யேமமாகும்
எப்படியும் வாதமாம் வெள்ளியாகும்
இதையறிந்து பாகத்தை விட்டுநீயும்
முப்படியும் நூல்பொய்யே யென்றுசொன்னால்
முத்தியுண்டோ உங்களுக்கு மூணெந்துபாரே. (77

முடிவரைகுஞ் சரக்கெல்லாங் கட்டியாடும்
மூக்கியமாம் வாதம்வரும் கலையும்போகும்
அடியான மரந்தனிலே யேறிப்பாரு
அடுத்துநீ நுனிமட்டும் யேறலாகும்
பிடியான கொம்புண்டாம் பிடித்தேற
பிலக்குமே யிப்படிக்குப் பெருமையாகும்
குடிகாரன் போலவே சொன்னேனென்று
கூட்டுவித்த நூலெல்லா முடியப்பாரே. (78)

பார்த்துநீ நூலினுட மர்மங்கண்டு
பதித்துவைத்த கண்ணாடி நிழலைப்போலே
சாத்துநீ யினங்கண்டு சேர்வைகண்டு
சரியான பாகமது பார்த்துநன்றாய்
கோர்த்திடுநீ ஊசிதனிற் சாடுபோலே
குணம்பெரிய பாகமதைக் கண்டுநன்றாய்
சோத்துக்கு யிடக்கேடச் சொன்னேனய்யா
சுருதியின்னா லுணர்ந்தாக்கா லெல்லாமாமே. (79)

கல்லுப்புச் சாரக்கட்டு.

கல்லுப்புச் சேர்நாலு கல்வத்திட்டுக்
கனியவதைப் பொடியாக்கிப் பாண்டத்துள்ளே
மெல்லவே யிட்டுஅதின் மேலேதானும்
வெடியுப்பு சேர்நாலு இடித்துக்கொண்டு
மெல்லவதைப் பாதிவைத்து அதின்மேலாக
மேதினியிற் சீனத்தைப் பொடிசேர்நாலு
சொல்லவதைப் பரத்திடுநீ யென்றுசொன்னார்
சூக்ஷமதா யாகோபு திறமைதானே. (80)

சாரமது சேரிரண்டு அதன்மேலிட்டுத்
தக்கபொடி சீனமுன்போல் அதிலேபோட்டு
ஊறலற்ற வெடியுப்புப் பொடிதானிட்டு
உயர்வான கல்லுப்புப் பொடிதானிட்டு
சேரவதை யடிழ்த்திரன்று யடுப்பிலேற்றிச்
செப்பரிய பாண்டத்திற் சொல்லக்கேளு
பாரமிகு மணல்நிறையப் பின்புநன்றாய்ப்
பதியவிட்டு அக்கியெரி பண்புள்ளோரே. (81)

எரித்திடவே முச்சாமங் கமலவன்னி
இதமாக யெரித்தபின்பு யெடுத்துமண்ணை
பிரித்திட்டுக் கொட்டியே உப்பகற்றிப்
பிரியமாய்ப் பார்த்திடவே சாரந்தானும்
சரியாகக் கட்டியா யுருகிநிற்கும்
சாரமது தந்தம்போ லிருக்கும்பாரு
அரிதமாய் நின்றதொரு சாரந்தன்னைச்
சுண்ணமது பண்ணவென்றுற் சொல்லக்கேளே. (82)

சாரச்சுண்ணம்.

மதிநிறமாஞ் சீனத்தைக் கரியில்வைத்து
மயம்பெறவே நாறுதர மூதித்திரு
பதியாகக் கரையாது சுண்ணமாகும்
பதியவே சாரமிடை கல்வத்திட்டு
விதியுயரும் அண்டவெள்ளை தெளிந்தநீரால்
விடுபடவே அரைத்துவில்லை கதிரில்வைத்து
நிதியாகப் புடம்போடப் பூப்போல்நீறும்
நேர்த்தியா யாகோபு நிசஞ்சொன்னாரே. (83)

நாகக்கட்டு.

மெச்சுகவச் சாரசுண்ணம் பீங்கானிட்டு
மேன்மையாய் பனியில்வைக்க ஆறுநாளில்
மிச்சமாய்ச் செயநீராம் வீரமிட்டு
மேன்மைபெற மண்கலசந் தன்னில்வைத்து
தற்செயலாய் நாகத்தை யுருக்கிமூவேழ்
தணச்சாய்க்க நாகமது கட்டும்நன்றாய்
மூச்சுடரா யிருக்குமென்று யாகோபுசொன்னார்
முனிந்தமெதல்லாம் யேமமாய் மொழிவார்தானே. (84)

நாகசெப்பு வேதை

கட்டியதோர் நாகமது பலமுமொன்று
கனகமது செம்புயெட்டு ஒன்றிலிய
எட்டியதோர் பசும்பொன்றாய் யிடையேயேமம்
இனிதாகச் சேர்த்துருக்க யெல்லாந்தங்கம்
செட்டிகையி லேறுமது புடமிறங்கும்
சீரான வாதமெல்லாம் நாகத்தாலே
பெட்டிதனில் வைத்தெடுத்த பணமுமாகும்
போரான யாகோபு சொன்னவாறே. (85

அரிதார சுத்தி.

உருக்குமட லரிதாரஞ் சுத்திபண்ண
உறுதிபெறச் சுக்கான்கல் நூறெடுத்து
பிரித்தெடுத்துப் பெருங்கல்லாய் ஒருநாள்மட்டும்
பெருக்கவே கரியிலிட்டு ஊதுநன்றாய்
தரித்திரம்வா ராதுஊ தினதோர்கல்லைத்
தடையறவே அப்பிஅதின் மேலேதாரம்
பிரித்துவைத்து அதின்மேலே ஐந்துகல்லைப்
பிரியமுடன் வைத்ததற்கு வெண்ணீரூற்றே. (86

ஊத்திடவே சுண்ணும்பு பொங்கிநன்றாய்
உறுதிபெறத் தகதகனென் றடங்கிப்போகும்
ஏத்தபடி அரிதாரம் எண்ணெய்க்கக்கும்
இனிதாக யிப்படிக்குத் தரமும்பத்து
நாத்திசையு மெய்க்கவே கசடுநீங்கி
நலமாக வாதவயித் தியத்திற்காகும்
கூத்தனுரை செய்ததுதா னிந்தவித்தை
கூறினார் யாகோபு குறிப்பாய்த்தானே. (87

அரிதார பற்பம்.

கசடற்ற அரிதாரம் பலமும்பத்து
கனிந்தவரை பொடிதானும் பலமும்நேரே
நிசமாக ரெண்டுமொன்று யரைத்துப்பின்பு
நோரான சாரமது பலங்காலிட்டு
பிசகறவே அரைத்துகுகை தன்னில்வைத்து
பெறகுவதை யுருக்கிடவே மணியாய்நிற்கும்
வசமாகக் கல்வமிட்டு உடைத்துச்சாரம்
வண்மையுள்ள பச்சையா யரைத்துக்கொள்ளே. (88)

வங்கச் சுண்ணம்.

அரைத்துகுகை தன்னிலிட்டு உருக்கிநன்றாய்
அடவாகக் கசடகற்றிப் புறம்பாய்வைத்து
பரையினுட கருநாகம் பலமுமைந்து
பதியவெடு அயக்கரண்டி தன்னிலிட்டு
கரையவதை யுருக்கியதின் மேலேதானும்
கடுமையுள்ள வெடியுப்பு ஐந்தாங்காய்ச்சல்
முரையவிடு கருநாக முருகும்போது
முனிவாக உருக்கிமெள்ளக் கிண்டுகிண்டே. (89)

கிண்டிவிடு கரண்டியினாற் தேய்க்கத்தேய்க்க
கிருபைதரு மஞ்சளா மஞ்சள்தன்னை
மூண்டியெடு பசப்புதனி லிட்டுப்பாரு
முனைந்துஅது சுண்ணாம்பு போலேயாகும்
கண்டிதனைக் கல்வமிட்டு அரையன்னத்தால்
கருத்துறவே முச்சாமம் வில்லைதட்டி
மிண்டாகப் புடமிட்டு யெடுத்துக்கல்வம்
மிட்டுஅரை அன்னத்தால் வில்லைதட்டே. (90)

தட்டிக்கதிர் காயவைத்துப் புடமுமிட்டுத்
தனிவாக யிப்படிக்குப் புடமும்நான்கு
இட்டுயெடு மாதளம்பூ நிறமுமாகும்
இதையெடுத்துக் கல்வமிட்டுப் பின்புமுன்னே
தட்டியுருக் கின அயத்தைப் பாதிசேர்த்து
தடையறவே அன்னமென்ற நீராலாட்டி
கட்டியதை வில்லைதட்டிக் கதிரில்வைத்துக்
கருத்தாக புடம்போட்டு யெடுத்துக்கொள்ளே. (91)

எடுத்துமே யிப்படிக்குச் சிவக்கமட்டும்
இன்பமாய்ப் போட்டெடுக்க அலரிப்பூப்போல்
அடுத்துமே துருசினுடை செம்புநூற்றில்
அனைத்திடவே காஞ்சனமாம் செயமுமாகும்
கொடுத்துநீ பணவிடைதான் தேனிலுண்ணக்
கொடுஞ்சுருக்கு நசையெல்லாங் கடலேபுக்கும்
விடுத்திடுமே சூலைபதி னெட்டுவாதம்
விரைந்தோடும் யாகோபு விளம்பினாரே. (92)

பக்கமாஞ் சூலையெல்லாம் பதறியோடும்
பதிவான மேகரணம் கன்னச்சூலை
மிக்கவலி குன்மமெட்டும் தாகசோபம்
வித்துபடு மெய்யெல்லாம் அலரிப்பூப்போல்
சொக்குமது சயகாசம் பவுந்திரங்கள்
சொற்பெரிய தமரகமாம் வாய்வுபோகும்
துக்கமறு மென்றுசொன்னார் யாகோபுதானும்
துலையாத பெருநோவுந் தீருந்தானே. (93)

அயமுருக்கத் தாரயீயம்.

நல்லிரும்பு அரபொடியு மரிதாரம்ரெட்டி
நாட்டியரை சாரமிட்டு அரைத்துநன்றாய்
சொல்லினிய குகையிலிட்டு உருக்கித்திரு
சுத்தமணி யாயிருக்கும் அயமுந்தானும்
மெல்லவதிற் சாரமது காலுஞ்சேர்த்து
மெதுவாக உருக்கியெடு தாரமீயம்
மெல்லவதி லிருக்குமென்று யாகோபுசொன்னார்
வித்தகர்தா னறிவாளர் விரும்புவாரே. (94)

கருநாகச் செந்தூரம்.

கருநாகங் காண்டியிட்டு உருக்கிநன்றாய்
கனக்கஅசம் னீரினிற்சாய் பத்துயெட்டு
உருகஅதை உருக்கிநன்று அயமுஞ்சேர்த்து
உண்மையொடு கல்வமிட்டு நய்யத்தட்டு
தருகாம லரைத்திடுநீ அன்னத்தாலே
தாக்கவே வில்லைதட்டிக் கதிர்முன்வைத்து
குருவாகப் புடமிட்டுக் கல்வத்திட்டு
கூட்டியரை யாகோபு குணஞ்சொன்னாரே. (95)

கூட்டியன்ன மிட்டுநன்றாய் நாலுசாமம்
குமுரவறை வில்லைதட்டிக் கதிரில்வைத்து
மாட்டிவிடு யிப்படிக்குப் புடமுமஞ்சு
மயமாகப் புடம்போடச் சிவந்துபோகும்
சாட்டிநீ முன்னுருக்கு அயமும்பாதி
சாத்திடுநீ யன்னத்தா லரைத்துவில்லை
கோட்டிசெய்யாப் புடம்போடு சிவக்கமட்டும்
குணமாக யெடுத்திடுநீ குருவுமாமே. (96)

குருவெடுத்துச் செம்புநூற் றென்றிவிட்டால்
குணமாகக் காஞ்சனமாம் வாதவித்தை
திருவாக யிருந்திடுங்காண் செலவுசெய்து
திடமான சுழிமுனையில் ஞானம்பாரு
பருவமுடன் பணவிடைதான் தேனிலுண்ணப்
பருதியைப்போல் தேகமுமாம் பரிவுமெத்த
உருவாக நான்குயுக மிருக்கலாகும்
உறுதியா யாகோபு உரைத்திட்டாரே. (97)

உண்ணபண விடைதானுஞ் சயங்களெல்லாம்
ஊரைவிட்டு ஓடுமது உருவாந்தேகம்
நண்ணஉயிர் வந்திடுங்காண் சூலையெல்லாம்
நாணிவிடு மிதின்பெருமை நவிலொண்ணாது
சண்ணுமடா உலகத்தில் நசைகளெல்லாம்
தரையதனி லிதுவறிந்து தன்மையாக
கண்ணிமைக்குள் சகலதுன்பம் நீங்குமென்று
கருதினூர் யாகோபு கருத்தாய்த்தானே. (98)

வங்கமதின் செந்தூரம் உடலிற்சேர்ந்தால்
வலுமைமெத்த யேனியது தங்கம்போலாம்
பங்கமது வாராம லுருக்கிப்பாரு
பதிவான சத்திருந்தால் மலமுங்கட்டும்
சிங்கம்போ லுற்றஉடல யிளைத்துப்போகும்
சித்தியில்லை அன்னமுள்ளே இறங்கிடாது
அங்கமெல்லாங் குறைந்துவிடு மென்றுசொன்னூர்
ஆண்மையுள்ள வங்கத்தின் பெருமைதானே. (99)

சத்திருந்த வங்கமதை யுண்டபேர்க்குத்
தடையறவே பேதிக்குத் தான்கொடுத்து
மூத்தினதோர் தேங்காயைத் திருகிப்பாலே
முக்கியமாய்ப் பிழிந்துஅன்ன மிட்டுஉண்ண
நத்தியது முறிந்துவிடுந் தோசம்போகும்
நாடிவங்க தோசமறும் நலமதாக
புத்தியினால் கண்டுபிடி காரியந்தன்னைப்
போக்கோடே யாகோபு புகன்றிட்டாரே. (100)

கையறியாப் பேர்களவர் வங்கந்தன்னைக்
கருதியே செந்தூர பற்பஞ்செய்தால்
மெய்யாக அதைவாங்கிப் பொசிக்கவேண்டாம்
மெய்மறந்து போகாமல் வாங்கிநீயும்
வையகத்தில் சினமோர் செந்தூரத்தை
வகையாகப் போட்டரைத்துக் கரியிலிட்டு
பய்யவே உருக்கிடவே உருகிப்போகும்
பரிவாகச் சோதித்து உண்டுதேறே. (101)

மந்திரத்துக் கெட்டாத முதலோன்றன்னை
வணங்கியே நமஸ்கரித்து மகிமையான
செந்தூரந் தன்னைவைத்துச் சீஷாதன்னில்
சித்திபெற வைத்துநீ செயமாய்ப்பேசி
மூந்தவனை அனுப்பிவைத்துக் கதைகள்சொல்லு
முகந்தன்னைப் பாராதே யிருந்துநீயும்
சிந்தையிலே பெருமைவைத்துச் சிரித்துக்கொள்ளு
செப்பினோர் வயிர்பிழைக்க யாகோபுதானே. (102)

நசையாளி தன்னுடைய வருத்தமெல்லாம்
நன்மைபெறச் சொல்லியபின் நாட்டங்கண்டு
பிசகாக அவன்முகத்தைப் பார்த்திடாதே
பெருமைபெறச் செவியாலே கேட்டுக்கொண்டு
நிசமாகச் செந்தூரக் கிரயங்கேளு
நிச்சயமாய் ரெண்டுகேளான் அயீவான்
வசமாகும் பிணிபலவுந் தீர்ந்துதென்றால்
வகையென்ன வென்றுறுதி பேசிக்கொள்ளே. (103)

பேசியபின் செந்தூரங் கொடுத்துவாநீ
பிணிகொஞ்சம் விலகுவாறு பாதிவாங்கி
வாசனையாய்ப் பேசியிரு பங்குதீர்ந்தால்
வகையாகப் பின்பாதி வாங்கிக்கொள்ளு
தோசியர்க ளுலகத்தோ ரிருப்பாரப்பா
துன்பமது தீர்ந்தாக்கால் பேசமாட்டார்
ஊசிகொடா ரின்பமாய்ப் பேசுவார்கள்
உலுத்தருக்கு உலுத்தர்போ லுறுதிசொல்லு. (104)

வேடமதை வயித்தியர்போல் பூண்டுகொள்ளு
விருத்தரைப்போல் பேசிவிடு மிகவும்நன்றாய்
பாடமதாய் நூலதனைப் படித்துக்கொள்ளு
பத்தியடன் நசையாளன் கையைபபாரு
மூடனைப்போ லிருகாதே ஞேயைச்சொல்லு
முக்கியபணம் வாங்காமல் மருந்தையீந்தால்
ஓடமதின் மீதேறிக் கரையேபோன
உறுதியொக்கும் பண்டிதர்கள் நேசந்தானே. (105)

தனிதருக்குப் பிணிபலவும் வந்ததென்றால்
மதித்துஅவன் முகம்நோக்கி மருவிப்பார்த்து
இனிதான கடவுள்பதந் தெண்டனிட்டு
எற்கையுட னவிழ்தமது கொடுக்கநோய்கள்
பனியதுபோல் விலகிவிடும் உறுதிபார்த்துப்
பதிவாகத் தீருமென்று லவனைநாடி
கனிவாகப் பழம்போலே பேசிக்கொண்டு
காரியமாஞ் செந்தூரங் கருதித்தாக்கே. (106)

உருதியுடன் பிணியாளன் வந்துவுன்னை
உண்மைசொல்லி அடிபணிந்து கேட்டுக்கொண்டால்
அருதியாய்ப் பின்னாலே போகவேண்டாம்
அடுத்துரெண்டு தரமலைந்தால் மனைக்குயேகு
விருதியுள்ள தாம்பூலந் தனையெடுத்துப்
பேசியே கதைசொல்லி யிருந்துகொண்டு
உருதிபட வெளியேறி வாவென்றேதான்
உரைத்தாரே யாகோபு உண்மைதானே. (107)

அடுத்துமுன்னே யெழுநூற்றிற் சொன்னமையை
அடவாகத் தானெடுத்து யில்லையிற்பூசி
கொடுத்துவிடு நசலெல்லாந் தீர்ந்துபோகும்
குறியாகப் பேசிடுவார் குறியாய்ப்பார்த்து
கெடுகாமல் பிழைத்திடுவார் பணங்களீவார்
கிருபையுடன் தாராள மாகத்தானும்
விடுகாதே செய்துவிடு என்றுசொல்லி
விதமான யாகோபு விளம்பினாரே. (108)

சொன்னபடி தீர்க்குமந்த செந்தூரத்தைச்
சொல்லுகிறேன் கைபாக வரிசைதன்னை
நன்னயமா யாதியிலே முனிவர்தானும்
நாடியெனக் கருள்புரிந்த நடக்கைதானும்
இன்னிலத்தில் பண்டிதர்கள் பார்த்துத்தேறி
இனிதாகப் பிழையென்று சொன்னாரென்னை
கன்னல்போற் செந்தூரஞ் செய்துநாளுங்
கருத்தறிய பிணிபலவும் தீர்த்திட்டேனே. (109)

உருக்குழிச் செந்தூரம்.

கடுமையுள்ள உளியதனை நய்யத்தட்டி
கணக்காக தகடடித்து பொடியாய்ராவி
அடுமைபடுந் தன்னுடைய சடலநீரில்
ஆறுநாள் வைத்திடவே சிவந்துநிற்கும்
தடுமாறு தனைதயெடுத்துக் கல்வமிட்டுத்
தாக்கியரை வில்லைசெய்து கதிரில்வைத்து
படுகுமதைப் புடமிடவே பவளமாகும்
பார்த்தறிய யாகோபு பாவித்தாரே. (110)

புடம்நாலு யிட்டிடவே முருக்கம்பூவாம்
புத்தியுட னெடுத்துவைத்துப் பின்புகேளு
திடமாகக் காந்தமது பலமும் நாலு
திட்டமாய்ப் பாண்டமிட்டுக் காணந்தன்னை
இடைநாலு படியளந்து போட்டுப்பாணி
எட்டுவிட்டுப் படியளந்து அடுப்பிலேற்று
திடமாக அங்கியிட்டு யெட்டொன்றாக்கித்
திறமையுட னிருத்துஅதை வைத்துக்கொள்ளே. (111)

இருத்துப்பின் காந்தமதைக் கல்வத்திட்டு
இழுத்தரைநீ கிஷாயத்தால் நாலுசாமம்
உருத்துயெடு வில்லைதட்டிக் கதிரில்வைத்து
உறுதிபெறக் காய்ந்தபின்பு புடமுமிட்டு
நிருத்துயெடு யிப்படிக்கு ஐந்துநேரம்
நிரையான புடமிடவே பவளம்போலாம்;
செருத்துயெடு புறம்வைத்துச் சொல்வமென்றால்
சித்திபெற்ற யாகோபு செப்பினாரே. (112)

லிங்கக் கட்டு.

சாதிலிங்கம் பலம்ரெண்டு கரண்டியிட்டு
தருகவதைப் பழச்சாறு மதுவுநோய்
பேதிக்கு விடுசுருக்கு சாமரெண்டு
பிறட்டிஎடு பின்புதான் புறம்பாய்வைத்து
வாதிக்குக் கெந்தகமும் சீனம்நோய்
வகையாகப் பலம்ரெண்டு கல்வத்திட்டு
நீதிக்கப் பொடியாக்கிக் கொஞ்சந்தானே
நிலைக்கயெடு கரியோட்டில் போட்டுக்கொள்ளே. (113)

போட்டுமே கரிநெருப்பி லுருக்கிமெள்ள
பிரியமுடன் வன்னியைத்தான் பிரட்டித்திரு
காட்டிடுநீ கொஞ்சங்கொஞ்ச மாகப்போட்டு
நலமாகப் பிரட்டிமெள்ள யெடுத்துப்பாரு
கூட்டிடுமே கம்பியெல்லா மிறுகிக்கட்டும்
குணமாக முன்செய்த செந்தூரத்தில்
மூட்டிடுநீ நாலுக்கு ஒன்றுலிங்கம்
முத்திபெறத் தானரைக்க கிஷாயங்கேளே. (114)

அரக்குக் கிஷாயம்.

கொம்பரக்குக் குருணியொன்று பாண்டத்திட்டு
குருக்குயிரு குருணிசலம் விட்டுக்காய்ச்சு
நம்பியெரி யெட்டிலொன்று யிருத்துக்கொள்ளு
நல்லசிவ பாக்கியமாங் கிஷாயந்தானும்
தம்பமுற யெடுத்துவைத்த செந்தூரத்தைத்
தாக்கியரை நாள்மூன்று கஷாயமெல்லாம்
வம்பில்லா வில்லைதட்டிக் கதிரில்வைத்து
வாகுபெற யாகோபு விளம்பினாரே. (115)

வில்லையெடு பூமிதனில் வைத்துமூடி
விருப்பமுள்ள செம்பின்மேல் மண்ணுமிட்டு
மெல்லவே அதன்பேரில் புடமுமிட்டு
மேவியெடு செந்தூரங் கண்கள்கூசும்
நல்லறிவா லெடுத்துசிமிழ் தனிலேவைத்து
நாட்டிலே நசைகொண்ட மனிதருக்கு
செல்லவே பணவிடைதா லுண்ணச்சொல்லு
செயமாகும் நோய்பிணியுந் தீருந்தானே. (116)

தீருமே சூலைபதி னெட்டுந்தானும்
செப்புமுன்னே சோகையுங்கா மாலையெல்லாம்
பாருலகி லில்லாமல் பறந்துபோகும்
பம்பரம்போ லாட்டிவைக்கு மேகவாய்வை
சாருகுடல் குன்மவலி யெட்டுந்தீரும்
தாகமெட்டும் வரட்சிகளுந் தானேபோகும்
காருநீ பத்தியமே புளியைத்தள்ளு
கருத்துகந்து சொல்லிவிட்டார் யாகோபுதானே. (117

தெம்புண்டாம் ஒழுகரையைத் தின்றிட்டாக்கால்
தேரிவிடுந் தேகமின்னுஞ் சிவன்முன்னாளில்
வம்புசெய்து திரிபுரத்தை யெரித்தாப்போல
வயிறுபசி மெத்தவுண்டு நரம்புதானும்
கொம்புகிளை போற்றழைக்கும் வாயுவெல்லாம்
குணமாகுங் கோதையர்கள் மிகவும்வேண்டும்
கம்பமதா யானையைப்போ லாகுமென்றார்
கருத்துணர்ந்து யாகோபு கருதினாரே. (118)

மேகமுடன் பித்தவெட்டை பிணிகளெல்லாம்
மேதினியில் நில்லாது விட்டுநீங்கும்
சூகமுடன் விக்கல்பல சத்திமெல்லாம்
துப்பரவா யதிசாரஞ் சாந்தமாகும்
சோகமுடன் சோறுசெரி யாததெல்லாம்
சொக்கிவிடு மானபசி மிகவுண்டாகும்
யோகமுடன் வந்திடுங்காண் யாகோபுசொன்னார்
உத்தமர்கள் பாகமதை யறிகுவாரே. (119)

ஒருயிடத்தி லிருப்பாக யிருந்துகொண்டு
ஒழுகரையைச் செந்தூரம் பண்ணிநீயும்
குருவாக வைத்துநீ ஒருபலத்தை
குணமாக விற்றுநீ செலவுசெய்து
பொருளாக ஒருவருடஞ் செலவுசெய்து
பின்புதான் மனமடங்கி வாதம்பாரு
உருவாக களங்கமதைப் பார்த்துத்தேறி
உலகத்தில் யாகோபு உரைத்திட்டாரே. (120)

வெள்ளை பாஷாணச்சுண்ணம்.

எலிகொல்லி தனையெடுத்துப் புகையடக்கி
இருந்துஆரை கல்வமிட்டு எருக்கம்பாலால்
வலியயெடு பலமதைத்தான் மேலிற்கட்டு
வகையாக ஒட்டிரெட்டி யங்கியிட்டு
பலியகதிர் தனில்வைத்துக் சுண்ணச்சீலை
பத்துகட்டு குக்குடமாம் புடமுமிட்டு
தொலியயெடு துருசதுவும் நீருமாகும்
துடியாக யிருக்குமது சூட்சந்தானே. (121)

துருசுச் சுண்ணம்.

சட்டியிட்டுக் கிளிஞ்சிநீர் பாதியிட்டுத்
தனையமுழ்த்தி நடுவேயிட்டுத் துருசுச்சுண்ணம்
கொட்டியிடு பொடியாக்கிச் சதுரமாகக்
கூறுக விரக்கடையு மூன்றேயாகும்
கட்டியதை யமுழ்த்தியரி தாரந்தன்னை
கசடகற்றி மேலிட்டுத் துருசுநீற்றை
தட்டியிடு அதின்பேரில் முன்போலிட்டுத்
தடையறவே யமுழ்த்திமேற் சொல்லக்கேளே. (122)

மேலேயிடு கிளிஞ்சிநீர் நிரையவிட்டு
வெற்றிபெற யமுழ்த்திநன்று யடுப்பிலேற்றி
ஞாலமிடு கமலம்போ லெரிமுச்சாமம்
நாடியெடு பிரித்துப்பா ரரிதாரத்தை
கோலமது யிட்டாப்போல் வெள்ளையாகும்
குணமாக நீறிவிடுங் கொடியவேகம்;
ஆலமுண்ட கண்டர்தா னெனக்குச்சொன்னார்
அருள்பெருகி யாகோபு அரைந்திட்டாரே. (123)

திருசுணுட செம்பெடுத்து நாற்றுக்கொன்று
துடியாகத் தாரபற்ப மீய்ந்தாயாஞல்
வருசையுடன் காஞ்சனமாம் பணமவ்வீதம்
வாரியிடக் காசசய முடனேமாறும்
சரியாக வாயுவெல்லாம் மோடுங்கண்டீர்
சாதகமாஞ் சிலேர்ப்பனங்கள் தொண்ணூற்றுறும்
பரிபோலா மேனியதைப் பாருமென்றார்
பாலித்தார் யாகோபு பாக்கியவானே.

ஈளையெலி கடிவாய்வு குஷ்டரோகம்
இயல்பாகு மடைப்புவரும் வலியும்வாய்வும்
கோளையறும் வலிப்புதிர வாய்வுபோகும்
குணமாகுஞ் சயகாச முகவலிப்பு
பிளைகுஷ்ட. ரோகமெல்லாங் கடலேபுக்கும்
பேரான கரப்பனுமே பயந்துநீங்கும்
வேளைநல்ல அரிதார பஸ்பந்தன்னை
விசையாகச் செய்துவர வேகந்தானே.

கேந்தியியச் செந்தூரம்.

சவலையுள்ள யிரும்பதனைத் தகடாய்த்தட்டி
தக்கபுளி யிலைபோலே நறுக்கிக்கொண்டு
கவனமுடன் குகைதனிலே பரப்பிப்பின்பு
கனியஉலை மீதிலே கரியையிட்டு
தவமாகக் கடினமா யூதிப்பின்பு
தக்கவிடு நெல்லிக்காய் கெந்திரெட்டி
பவமாகக் கிராசமிடு உருகிநிற்கும்
பார்த்துயெடு யாகோபு பகர்ந்திட்டாரே.

உருகுமயம் ராவினது பலமும்நாலு
உற்றுயெடு வெங்காரங் காலதாகும்
வருக்வரை பாணியினல் கதிரில்வைத்து
வண்மைபெறப் பொடித்துகுகை தன்னிலட்டு
கருகவதை யுருக்கியெடு பீதரோடு
கணக்கவே கிளப்பிவிடு மிப்படிக்கு
முருகவதை வெங்காரஞ் சேர்த்தரைத்து
முத்திபெற உருக்கிடவே செயமுமாமே.

செயமாகு மிரும்பெல்லா மற்றுப்போகும்
செப்பரிய கெந்திதா னீயமாகும்
நயமாக யீயத்தைக் கல்வமிட்டு
நாட்டியே வீரமது நாலத்தொன்றும்
மயமாகும் பொற்றலையின் சாற்றாலாட்டி
மகிமைபெறப் புடமூன்று போட்டெடுக்க
வியனாகுஞ் செந்தூரம் ரவியில் நூறு
விட்டுருக்கி ஒன்றுகொடு விதியாம்பாரே. (128)

உருக்கிடவே காஞ்சனமாம் எடுத்துவித்து
உறுதிபெற வாசியோ கத்தைப்பாரு
பெருக்கிடவே பணவிடைதான் தேனிலுண்ணப்
பிதற்றுகின்ற வாதபித்தம் ஒழிந்துபோகும்
சருக்கிடையாஞ் சூலைபதிக னெட்டும்போகும்
சார்பான குஷ்டரண மேகம்போகும்
பருகிடுநீ யென்றுசொன்னார் யாகோபுதானும்
பாரிலுள்ளோர் தனக்கிடுகப் பாடினேனே. (129)

நெஞ்சாரப் பொய்யதனை மறந்துவிட்டு
நிதானித்துக் கெந்தியுட யீயந்தன்னை
அஞ்சாமல் வைத்துவிடு யெடுசெந்தூரம்
அடுத்துமெள்ள உண்டுவிட நசையுந்தீரும்
கொஞ்சமாய் வைக்காதே அதிகம்வைத்து
கொடுத்துவிடு மகிமையது மெத்தவுண்டு
தஞ்சம்வரு மாசையெல்லாங் கடலேபுக்கும்
தாபரித்தார் யாகோபு தன்மைதானே. (130)

நல்லாக ஒருபற்ப செந்தூரங்கள்
நயமான வுலகமெல்லா முன்னாடும்
எல்லாமுஞ் சித்தியாம் லோகந்தன்னில்
இன்பமாங் குருவென்று நம்புவார்கள்
சொல்லாகப் பெரியோர்கள் சொன்னசொல்லை
சுருதிதனி லாராய்ந்து பார்த்துத்தேரு
பல்லாக்கி லேறலாம் பாகம்வந்தால்
பரிவான யாகோபு பகர்ந்தவாறே. (131)

எண்ணிறந்த ரிஷிசித்தர் முனிவர் தானும்
இதமாகப் பாடினது தலையில்லாமல்
கண்ணிலுற் கண்டாலுந் தெரியப்போகா
கருத்துணர்ந்தா லிந்நூலிற் றெரியும்பாரு
புண்ணியற்குப் பாகம்வரும் புத்தியுள்ளோர்
பொருந்தவே செய்வார்கள் பொறுமையாக
எண்ணமற்றோர் கில்லையிந்தப் பாகந்தானும்
இருந்துரைத்தார் யாகோபு யிதமாய்த்தானே. (132)

சயகாசங் கொண்டார்க்கு மண்டூரத்தைச்
சாற்றுகிறே னிதுலெகுவு சார்ந்துபாரு
நயமாக யிதைவைத்துக் கொடுக்கவேதான்
நாடாம லோடிவிடும் சிலேற்பனங்கள்
மயமாகு மென்றுசொன்னார் யாகோபுதானும்
மகிழ்ந்துரைத்த போகத்தை மனதாற்கண்டால்
பயமாகி யோடிப்போம் சகலநோயும்
பார்த்துநீ பாகமாய்ச் செய்துகொள்ளே. (133)

அயக்காந்தச் செந்தூரம்

தகடிணிய காந்தமதைச் சுத்திசெய்து
தக்கயிடை யரபொடியுங் கல்வத்திட்டு
பகடுபோற் கையானை உரலிலிட்டு
பக்குவமா யிடித்துச்சார் பிழிந்துநன்றாய்
நிகடுபட வேயரைத்து வாகாய்வைத்து
நிச்சயமாய் நாளவங்கத் தாலேயூது
முகப்படவே யெடுத்துமே கல்வத்திட்டு
முன்னுரைத்த சாற்றினா லரைத்துக்கட்டே. (134)

கட்டியே கிரில்வைத்து வங்கநாளங்
கரியோட்டி லூதிஅது சிவந்துநிற்கும்
எட்டியெடு யிப்படிக்கு ஐந்துபாகம்
இதையரைத்து ஊதிவைத்துப் பின்புதானும்
சட்டியிடு கிளிஞ்சிநீர் படியும்ரெண்டு
சரியாக வமுழ்த்தியதின் மேலேதாரம்
கொட்டியிடு வதின்பேரிற் கிளிஞ்சிநீற்றைக்
குருமுறையாய் முன்போலே பதித்துக்கொள்ளே. (135)

கிளிஞ்சிநீ ரதின்பேரில் அமிழ்த்திவைத்துக்
கெடிபடவே யதின்பேரி லம்மிதன்னை
வளிஞ்சிடவே தூக்கிவைத்து யடுப்பிலேற்றி
வண்மைபெறக் கடுந்தியாய் முச்சாமந்தான்
தெளிந்திடவே யெரித்திடுநீ பிரித்துப்பாரு
திட்டமாந் தாளகமும் உருகிமஞ்சள்
பிளந்திடவே குங்குமம்போல் நிறமதாகும்
பேசரிது யிதின்பெருமை பேருள்ளோரே. (136)

அடுத்துமுன்னே ஊதினதோ ரயக்காந்தந்தான்
அதையெடுத்துப் பலமெட்டு கல்வமிட்டுத்
தொடுத்திடவே கிளிஞ்சிநீ ராலெரிந்து
துப்பரவாந் தாரமது பலந்தான்ரெண்டு
விடுத்தரசம் பலம்ரெண்டு தாரத்தோடு
விம்மியரை பொடியாக்கிச் சாமமொன்று
கொடுத்துநீ யயக்காந்த மதனிலிட்டுக்
குணமாகப் பொடியாக்கி பின்புகேளே. (137)

தந்திவிரை தோல்போக்கி வறுத்துக்கொண்டு
தனைநிறுத்துப் பலம்ரெண்டு கல்வத்திட்டு
மூந்தியரை மருந்தோடே சாமம்ரெண்டு
முகர்ந்தபொடி வைத்துபின்பு மார்க்கங்கேளு
சிந்தனையும் விடத்தலைவேர்க் கொம்புதானும்
சிறக்கவே பலம்ரெண்டு சொல்லக்கேளு
பந்தமுரு மிளகுபலம் ரெண்டுதானும்
பதியவுடை கடுக்காயும் பலமும்போடே. (138)

போட்டதனை நிறுத்துவைத்து நெல்லிமுள்ளி
புசபெலமாய்ப் பலமெட்டு சட்டியிட்டுக்
காட்டதனை யிளவறுப்பாய் வறுத்துக்கொண்டு
கல்வமதில் முன்மருந்தோ டொக்கவிட்டு
ஈட்டமுடன் கையாநீர் தன்னாலாட்டி
இதமாக வெடுத்துகதிர் காயவைத்து
சாடமதாய் கல்வமிட்டுப் பொடியதாக்கிச்
சரியான குடுக்கைதனி லடைத்துக்கொள்ளே. (139)

மூக்கண்ணுக் குடுக்கைதனி லடைத்துநீயும்
முனிந்துஅதை வைத்துமே சொல்லக்கேளு
திக்கிலுள்ள மனிதருக்குச் சயங்கள்காசம்
தீராத மூச்சுகள் தான் கண்டபோது
பக்கம்வந்த நசையாள னிடத்தில்நீயும்
பதிவாகக் கண்டிப்பாய் பேசிநன்றாய்
தக்கமிட்டுப் பணமெத்த வாங்கிக்கொண்டு
தாட்டிகமாய்க் கொடுத்துவிடு மருந்துதானே (140)

வெருகடிதா னொருபொழுது தேனிற்கொள்ள
வேகமுடன் வெகுளியது கண்டுதானால்
பருவமுடன் மருந்துதனை நிறுத்திக்கொள்ளு
பால்முரித்த பசுமோரில் அன்னமிட்டு
சுருகடுத்து விடுகாத தாகசோபந்
தனையகற்று சத்தியமாய் மூன்றுநாளும்
குருவாகக் கொடுத்துவிடு மலபேதத்தைக்
கூட்டுரவு யில்லாம லடிக்குந்தானே. (141)

வைகரையில் வெருகடிதூள் தேனிற்கொண்டால்
வகையாக வெகுளியதில் லாதேபோனால்
பையவெடு மாலைதனில் கொஞ்சந்தாக்கு
பதிவாக யிப்படிக்கு யாறுநேரம்
கையினா லெடுத்துசடம் பருவம்பாரு
கண்குறையும் அவிழ்தங்கள் யேத்திமெத்த
மெய்யாகச் சொல்லிவிட்டேன் யிந்நூல்தன்னில்
மேதினியில் யாகோபு விளம்பினாரே. (142)

காசமது வந்தவர்க்கு மருந்துதன்னை
கைகொடுக்கும் புளியுப்புத் தள்ளிப்போடு
பாசமது சயத்துக்கு உப்பைக்கூட்டு
பதிவாகப் புளிதள்ளு பாகமாகும்
நேசமதாய் மந்தார காசத்துக்கு
நிலைத்திடுமே புளியகற்றி வெந்நீர்கூட்டு
மோசங்கள் வாராது நசையுந்தீரும்
மூத்திபெற யாகோபு மொழிந்தவாறே. (143)

மண்டூரச் சூரணம்.

மண்டூரம் வெருகடிதூள் தேனிற்கொள்ள
மாரோகங் காசநோய் மாண்டுபோகும்
தொண்டுபடு மந்தார காசம்போகும்
தொல்லுலகில் பீனிசமுங் காசம்போகும்
பண்டுமுன்னே பெரியோர்கள் பகர்ந்தநூலை
பரிவாக யான்பார்த்து பாகமாகக்
கண்டுஅதைக் கொடுத்துநோ யெல்லாந்தீர்த்தேன்
கருத்துகந்து யாகோபு கரைகண்டேனே. (144)

நசையாகு மகோதரங்க ளாம்பறக்கட்டி
நாட்டியிடு சிலேட்டுமசுரம் நலமதாகும்
பிசகாகும் குன்மவலி பித்தவாய்வு
பேசுமுன்னே ஓடிவிடும் வாதமெல்லாம்
விசையான சூலைபதி னெட்டும்போகும்
விருப்பமுள்ள சன்னியது விலகும்நன்றாய்
கசடில்லை யிப்பிணிகள் தீருமென்று
கருத்துவைத்து யாகோபு கருதினாரே. (145)

பத்தியங்கள் தவறுமற் காக்கச்சொல்லு
பதியைவிட்டு யேகுமப்பா பாரிலேதான்
சித்தியா மேனியது கற்றானாகும்
செத்திடுமே வாதமெல்லாம் சூட்சமெத்த
புத்தியினாற் கண்டிடுநீ வியாதிதன்னைப்
புலன்தெரியாப் பத்தியங்கள் தவறிப்போனால்
நித்தியமு மலதிகள்தான் படுவானப்பா
நிச்சயமா யாகோபு நிசஞ்சொன்னாரே. (146)

இந்தநூல் தனிற்சொன்ன பற்பலேகியம்
இருந்துரைத்த செந்தூரம் மண்டூரங்கள்
சிந்தையிலே நினைத்துணர்ந்து பாகம்பார்த்து
சீர்பெறவே செய்திட்டுப் பொருளைத்தேடி
மூந்தியே சொன்னதிந்த வாதப்போக்கு
முத்திபெறச் செய்துவைத்து ஞானம்பாரு
விந்தையதா மதுவுண்ண மேலதாச்சு
வீணாகத் திரிந்தாக்கால் யில்லைத்தானே. (147)

புத்தியில்லா வாதியற்கு யென்சொன்னாலும்
புத்திவரா திருந்தாக்கா லென்னசெய்வேன்
நித்தமய மென்பனவே புத்திசொல்லி
நிலைமையன்னம் பண்ணிவித்து வஸ்திரமீய்ந்து
சித்தமதா யிருக்குமென்று அய்யர்தன்னைச்
சீர்கெடவே யெடுக்காதே யென்றுசொன்னேன்
நத்தியே யிருப்பாரோ யிருக்கமாட்டான்
நானிலத்திற் புத்திகெட்ட வாதிதானே. (148)

கடுமையா மண்டூரஞ் செய்துகொண்டு
கருத்தறியப் பிணியர்களைக் கண்டுநீயும்
அடுமையாய்க் காத்தாப்போல் பேசிக்கொள்ளு
அடுத்துஉடன் போகிறது போலேகண்டு
கொடுமையாம் பிணியுனுட பருவம்பார்த்துக்
குணங்கண்டு யெதிர்நோக்கிக் குறிப்புக்கண்டு
படுமுன்னே கையினுட வரிசைகண்டு
பகுத்தறிந்து விதிமுறையாய்ச் செய்துகொள்ளே. (149)

திப்பிலிரசாயனம்.

அரிசிதிப்பிலி பத்து கடுகுஐந்து
அடுத்துயெடு மிளகைந்து ஓமம்ரெண்டு
வரிசையுடன் சீரகமும் பலமும்ரெண்டு
வகைபெறவே சித்தரத்தைப் பலமும்ரெண்டு
பெரிதான லவங்கம்ரெண்டு பலம்நிறுத்துப்
பேர்பெரிய லவங்கபட்டை பலமும்ரெண்டு
வரிசையாய்த் திரிபலையும் பலமும்ரெண்டு
வடிவான இராம்பேலம் வகைக்குரெண்டே. (150)

ரெண்டோடு கொடிவேலி பலமும்ரெண்டு
நிலையாகக் கதிரில்வைத்து உரலிலிட்டு
பண்டுமுன்போ லிடித்துஅதை தெள்ளிப்பின்பு
பதிவான சட்டிதனில்த் தூவித்தன்னை
கண்டுபொடி தன்னையிட்டு மேலேகேளு
கனிவாக சூரணித்து முன்தூளிட்டு
தொண்டுபட மூடியதை யடுப்பிலேற்றித்
தொக்கவெரி நிழல்போலத் தொன்மைதானே. (151)

எரித்திடுநீ தானுமது புகையுமேறி
இதமாகச் சூரணத்திற் சொக்கிப்போகும்
பிரித்துயெடு சக்கரையுஞ் சமனுய்க்கூட்டிப்
பெருகவது மிருக்கவிட்டுக் கிண்டிநீயும்
குரித்துவெரு கடிவீத மந்திசந்தி
குணமாக வுண்டுவிடு குடிலமெல்லாம்
வரித்துவிடு மென்றுசொன்னர் யாகோப்தானும்
வகைகண்டு போகமதைத் தள்ளிக்கொள்ளே. (152)

விஷந்தீர.

புளிதள்ளி உண்டிடவே பத்துநாளிற்
புகளான அரணையெலி கடிகள்காசம்
களிவான உதிரவலி சூதவாய்வு
கழிந்துவிடு மந்தார காசம்போகும்
துளியான சிலேட்டுமமுந் துலையும்பாரு
துன்பமறு முதிரவலி வாய்வுயாவும்
பளியாகப் போகுமென்று யாகோப்சொன்னர்
பலித்திடுங்கா ணிப்பாகம் பாருள்ளோர்க்கே. (153)

பாகமது ஒருபாகம் வந்ததென்றால்
பதிவான பொருளெல்லா முன்னதாச்சு
தாகமது போய்விடுங்காண் வாதவித்தை
தப்பாது வந்ததென்றால் தளங்களோடே
யோகமது ஞானவழி யடுக்கும்பாரு
உண்மையிது நிசமாகும் உற்றுப்பார்த்து
ஆகமத்திற் சொன்னபடி யறிவுகண்டு
அறிந்துணர்ந்து யாகோபு சொன்னவாறே. (154)

இரசமெழுகு.

வேம்பினிலை குறுக்கறிந்து பாண்டத்திட்டு
விரும்பியிடு பாணிரெட்டி விட்டுக்கேளு
தாம்புபட அடுப்பேற்றி யெட்டிலொன்றாய்
தனைக்காய்ச்சிச் சட்டியிட்டு சூதங்காலாம்
சோம்புபடக் குழம்பாகக் காய்ச்சிக்கல்வஞ்
சுருக்காக யிட்டுமெல்ல அரைக்கச்சாமம்
வீம்புடனே மெழுகாகும் யெடுத்துவைத்து
விதமாகச் சொல்லுகிறேன் மகிழ்ந்துகேளே. (155)

மூக்கண்ணன் பால்படியும் நாலரைந்து
முற்றின்வெங் காயச்சார் படியுமொன்று
திக்கினிய கழற்சியிலைச் சாருமொன்று
திடமாகக் காய்ச்சிக்கொஞ்சம் வத்தமட்டும்
பக்குவமாய்த் தந்திவிரை பலமுங்கால்தான்
பரிவான ரசமெழுகு பலமுங்கால்தான்
சிக்கெனவே மெழுகுபத மாய்வடித்துச்
சிறப்பாக உண்டபின்பு சொல்லக்கேளே. (156)

உண்டபின்பு சூலைமுதல் வாதமெல்லாம்
உருதிபெற மேகமெல்லா மோடிப்போகும்
கண்டவுடன் சயகாச பித்தமெல்லாம்
கடல்புக்குங் பெரும்பாடுங் காணுதோடும்
தொண்டுபடும் வலிகுன்மம் பிளவைவாய்வு
தோசமொடு சோகையரி கிரந்தியெல்லாம்
பண்டுசெய்த பழவினைக ளெல்லாந்திரும்
பரிவான யாகோபு பலன்சொன்னரே. (157)

அறுவகைச் செயநீர்.

கம்பியுப்புப் பழம்பத்து சினம்நோய்
கல்வத்தி லிட்டுபொடி யாக்கிநன்றாய்
வெம்பினதோர் பழம்பிழிந்து தோலெடுத்து
விரும்புமுன் னிடைபாதி யுரலிலிட்டு
தம்பமற முன்பொடியைக் கூடப்போட்டுத்
தாக்கியிடி மெழுகாகும் வில்லைதட்டி
உம்பர்கோன் புதுச்சட்டி யடுப்பிலேற்றி
உற்றுவில்லை வைத்தெரி யுருமைதானே. (158)

உருதியா யெரித்தபின்பு வெண்ணீராகும்
உற்றுயெடு மஞ்சளிலே யிட்டுப்பாரு
பிருதியாய்ச் சிவந்துவிடும் பாகமாகும்
பேணியே கண்டெடுத்துப் பூநீர்தன்னை
அருதியா யிடைசேர்த்துக் கல்வமிட்டு
அதையரைத்துப் பழச்சாற்றில் வில்லைதட்டி
கருதியே கதிர்முன்ளே காயவைத்து
கணக்கவே புடம்போட்டு யெடுத்துக்கொள்ளே. (159)

எடுத்துமே புரம்பாக வைத்துக்கொண்டு
இனிதான அண்டோடு பலந்தான்பத்து
கடுத்துமே பழச்சாற்றால் நேகரைத்துக்
கனியவதைத் தெல்லுப்போல் வில்லைபண்ணிப்
படுத்திடுநீ கதிர்முன்னே காயவைத்து
பதிவான நாளத்தி லிட்டுவூது
தொடுத்துமே சுண்ணும்பா மண்டக்தானும்
தொக்கவரை முன்சுண்ணத் தோடேதானே. (160)

அரைத்துமே பழச்சாற்றால் சாமமாட்டி
அதன்பின்பு கதிரில்வைத்துப் புடமும்போடு
வரைத்துமே கடுஞ்சுண்ண மாகும்பாரு
வகையாக யிந்துப்புப் பலமும்பத்து
திரைத்துமே முன்சுண்ணத் தோடேசேர்த்துத்
திறமாகப் பழச்சாற்றை விட்டரைத்து
குரைத்துமே வில்லைதட்டிப் புடத்திற்போடு
கொடுஞ்சுருக்காஞ் சுண்ணமாம் கூர்ந்துபாரே. (161)

கூர்ந்துபார் சுண்ணமதைப் புரம்பாய்வைத்துக்
குணமான கல்லுப்புப் பலந்தான்பத்து
தேர்ந்துபார் கடலினுரை கரியிவிட்டுத்
திறமாக ஊதிக்கல் லுப்புச்சேர்த்து
வேந்தேபார் பழச்சாறு விட்டரைத்து
விதமாக அதைஊதச் சுண்ணமாகும்
ஊர்ந்துபார் முன்சுண்ணத் தோடரைத்து
உறுதிபெறப் புடம்போடக் கடுமைதானே. (162)

சுண்ணமெல்லாம் நிறுத்துமே கல்வத்திட்டு
தொக்கசுடர்க் கொடியோனும் பலமும்ரெண்டு
நன்னயமாய் நவச்சாரம் பலமும்ரெண்டு
நாடியரை முன்சுண்ணத் தோடேநன்றாய்
சொன்னபடி பழச்சாறு விட்டரைத்துச்
சுருதிபெறக் கதிரில்வைத்துக் காய்ந்தபின்பு
சின்னதொரு புடம்போட்டு யெடுத்துக்கல்வஞ்
சிறக்கவிடு வென்றுசொன்னார் யாகோப்தானே. (163)

பாஷாணச் சுண்ணம்.

எலிகொல்லி பலமைந்து யெடுத்துக்கொண்டு
இதமான சுக்கான்கல் பத்தெடுத்து
நலியவதை காளத்தி லிட்டுஊது
நலமாக நீறியபின் ஞட்டங்கேளு
வலியவெடு கல்லிந்து பரப்பிமேலே
வகையான பாசாண மதின்மேலிட்டு
பலியாக நீரியகல் மூடிநன்றாய்ப்
பாகமா யாட்டமுரி யாலேநீற்றே. (164)

ஆட்டமுரி விட்டிடவே பொங்கிநன்றாய்
அடவான வெள்ளைப்பா சாணமெண்ணெய்
கூட்டோடே கக்கிவிடும் எடுத்துநன்றாய்க்
குணமாக யிப்படிக்கு பத்துபாகம்
தேட்டமாய்ச் செய்திடவே சுத்தியாச்சு
திடமாகும் யெடுத்துவைப்பாய் திறமைகேளு
பாட்டோடே முன்வைத்த சுண்ணந்தன்னில்
பாதியிடை நவச்சாரம் பண்புமாமே. (165)

இட்டுபனி பீங்காணிற் பரப்பிவைக்க
இதமாகச் செயநீறு ஆறுபோலாம்
பட்டுமே சீஷாவி லடைத்துநீயும்
பதியஒரு துட்டிடைதான் வீரம்லிங்கம்
கட்டுமே பூரமது பொடித்துப்போட்டு
கனக்கவைத்துப் பின்புநீ பாகங்கேளு
விட்டிடுநீ வெள்ளைப்பா ஷாணந்தன்னை
விரும்புகரி யோட்டிலிட்டுச் சுருக்குப்போடே. (166)

பாஷாண மெழுகுவேதை.

சுருக்கிட்டு ஒருசாம மெடுத்துக்கல்வஞ்
சுத்தமுடன் வெள்ளைமக் தாரச்சாறு
பெருக்கவிட்டு அரைச்சாம மெழுகுமாகும்
பேசாதே மெழுருதனை யெடுத்துவைத்து
உருவாக ரவியுறுக்கி நூற்றுக்கொன்று
உறுதிபெற யிட்டிடவே வெள்ளியாகும்
கருவாக வெள்ளியம் நூற்றுக்கொன்று
கருணைபெற விட்டிடவே ரசிதமாமே (167)

ஆகுமே லவணமது யிருபத்தைந்தும்
அடவாய் பாஷாண மறுபத்திருலும்
பாகுமே யுபசரங்கள் நூற்றிரண்டு
பதிவாக உருகுமது கட்டுமாகும்
ஏகுமே சுண்ணமுமாம் எழிதில்வேதை
இன்பமாய் வெடியுப்புச் சுண்ணத்தாட்டு
வாகுபெற முன்னோர்கள் சொன்னநீதி
வகைபார்த்து யாகோபு சொன்னவாறே. (168)

கம்பிஉப்பின் பெருமை.

கம்பியுப்புச் சுண்ணத்தால் சித்தர்தானும்
கனிவாகச் சரக்குகளை கட்டிநன்றாய்
தெம்புடனே வாதவித்தை பார்த்தாரப்பா
தேவியர்க்குச் சிவன்றானு முபதேசித்தார்
நம்புதலாய்ச் சொன்னாராம் நானிலத்தில்
நடக்கைகளைப் பார்த்துமே யெனக்குச்சொன்னார்
செம்புதனைக் காஞ்சனமாய்ச் செய்தார்யாகோப்
செயம்பெற்ற ஞானங்கள் பார்த்திட்டாரே. (169)

நல்லகுண மாயிருந்து செய்கைகண்டு
நாடிவெடி யுப்பதுவைப் புகைநீர்பண்ணி
வெல்லவொரு சரக்குகளைக் கட்டியாட்டி
விரும்பியே ரவிபழுக்க வைத்தாரப்பா
கல்லல்பட உலகத்தில் வாதிதானும்
கருவான புத்தியுரை யாமற்றானும்
சொல்லறிவைக் கேட்டுமே சுட்டுக்கெட்டார்
சோதனைக ளில்லாமற் றஞ்சுவாரே. (170)

துஞ்சுவார் நூல்கள்பொய் யென்றுஞ்சொல்வார்
சூட்சமில்லை வாதந்தான் வந்துதென்பார்
கெஞ்சுவார் பிரட்டுரச வாதமென்பார்
கேள்வியினில் மாளாது மூலிதன்னை
மிஞ்சியே பரித்திடுவார் சுருக்குப்போட்டு
மீறியே போச்சுதென்பார் உலகவாதி
பஞ்சிட்டுப் பாரமதை யேற்றமாட்டார்
பாரிந்த அவசரமாம் வாதிபோக்கே. (171)

அவசரத்தில் மருந்தரைத்து அரைபடாமல்
அனுத்துமே புடம்போட்டு உருக்கிப்பார்த்து
கவசமது கட்டவில்லை யதினாற்போச்சு
கணக்கதுவுந் தவறிவிட்ட தென்றுஞ்சொல்வார்
நவமான ஒன்பதாம் லோகந்தன்னை
நாட்டாமல் விட்டமென்றும் பின்னுஞ்சொல்வார்
சவம்போலே பிதற்றுவார் புத்தியில்லார்
தருமான பொருளெல்லாம் போச்சென்பாரே. (172)

வேடிசீனத் திராவகம்

இம்பியுப்புப் பலம்பத்து கல்வத்திட்டுக்
கருத்துடனே பொடிபண்ணிச் சீனந்தன்னை
கம்பியே நிறுத்து யிருபத்தைந்தாம்
நாட்டமா யிரண்டுமொன்றாய்க் கலந்திடித்து
வெம்பியிடி கடமரையாம் வாலைமூடி
விரும்பியிடு சீலைமண்தான் பிலக்கச்செய்து
தும்பிதனில் நீர்வருகும் வெள்ளைநீராய்
துப்பரவாய்த் தள்ளிவிடு நடுநீர்வாங்கே. (173)

நடுநீரா மஞ்சள்நிற மானநீரை
நாட்டியெடு குப்பிதனி லடைத்துக்கொண்டு
கடுமையுள்ள சாதிலிங்கஞ் சேரிரண்டு
கல்வமதி விட்டுபொடி மையதாக்கி
அடுமைபெற நடுநீரை விட்டுஆட்டி
அரைச்சாமம் வைத்துமண் பீங்காலிட்டு
படுமடியி னெருப்பதனிற் பாகமாகப்
பதறாதே வருத்துயெடு பின்புகேளே. (174)

வாலைரசம்.

படிரெண்டு வடிக்கின்ற பானைதன்னில்
பதியவிடு வன்னியைத்தான் பதமாய்க்கேளு
வடிவான மூன்பானை போலேமேலே
வைத்தெடுசீ மூடியபின் சீலைசெய்து
மூடிவான அடுப்பதனில் வைத்துவாங்கி
முனிந்துவிடு சாமமொன்று யெரித்துஆற்றி
குடியாக யெடுத்துஅதைப் படுக்கவைத்துக்
குணமாகச் சீலைதனைப் பிரித்துப்பாரே. (175)

பிரித்தெடுக்க மேலேறி ரசமும்நிற்கும்
பின்புநீ மயிர்க்குச்சி யால்வழித்து
குரித்து அதைப் பீங்கானி லிருத்துநன்றாய்க்
குடிலமறத் துணியிலிட்டுப் பிழிந்துபாரு
சிரித்தபல்போல் நிசமாகும் ரசமுந்தானும்
சித்தியா யதையெடுத்துப் பிரம்பாய்வைத்து
வரித்தயிந்த ரசப்பேரு வாலையாகும்
வண்மையுள்ள யாகோபு வசனித்தாரே. (176)

கல்லுப்புப் படிநாலு உரலிலிட்டுக்
கடுமைபெற யிடித்தெடுத்துச் சட்டிதன்னில்
மெல்லவிட்டு வருத்துப்பார் நீர்கள்வத்தும்
மேன்மைபெற நாலுபடிக் கொன்றுசெங்கல்
செல்லரெண்டுஞ் சேர்த்துமேல் சட்டியிட்டுச்
சிறக்கநீர் விட்டமுழ்த்தி நடுவிலேதான்
கெல்லுகுழி தனில்வாலை ரசமும்நாலு
கெடிபடவே பலம்விட்டு மேலேமூடே. (177)

மூடியபின் வரைதனிலே யழுத்திசீலை
முக்கியமாய்ச் செய்திடுநீ யடுப்பிலேற்றி
நாடியதோ ரிருவிறகால் நாழிநாறு
நலமாக அங்கியிடு கமலமாகும்
கூடியதோ ரெரிப்பதிக மானால்நீயும்
குறைந்துதென்றால் வேகாது வாந்திபண்ணும்
கூடியே பாகமதாய் எடுத்துஆற்று
சூட்சமா யாகோபு சொன்னவாறே. (178)

சரியாக யெரித்துசட்டி தனைப்பிரித்துச்
சாதகமாய்ப் பார்த்திடவே உயரயேறி
முரிபோலே யிருந்திடுங்காண் தங்கம்போலாம்
முனையான மயிர்க்குச்சி தன்னால்வாங்கி
குரியான நாவுதனிற் கொஞ்சம்போடு
குணமாக வாந்திபண்ண திருந்துதானால்
யரிவான பாகமிது வென்றுசொல்லி
பாலித்தார் யாகோபு பரிவாய்த்தானே. (179)

தங்கம் வீரம் வைப்பு.

ஏற்றினதோர் ரசமொருசேர் நிறுத்துக்கொண்டு
இனிதான கரியுப்பு வருத்துக்கேளு
கூறினதோர் பலமாறு தூளாய்பண்ணிக்
கொடுஞ்சாருக்கு அருசுவது கூட்டுநீயும்
பாரில்சிறு பலம்நாலு பூநீர்ரெண்டு
பரிவான கம்பியுப்பொன் றரையாங்கேளு
சீரிவருஞ் சீனந்தான் பலமுமொன்று
சிறந்தஅன்ன பேதியது பலமுமொன்றே. (180)

சாரமது பொடியரையாந் தாரங்காலாம்
சரியான வெள்ளை பலமுங்காலாம்
கோரமது வாராமற் பச்சையாகக்
குணமாகப் பொடித்துவிடு காசிக்குப்பி
நேரமடைச் சீலைசெய்து அடுப்பிலேற்றி
நிலவரமாய்ச் சாமம்நா லெரித்துஆற்று
பாரமது ராக்கால மாறப்போட்டுப்
பரிவாகப் பதினாறு சாமந்தாக்கே. (181)

தாக்கியெரி சாமந்தான் கழிந்தபின்பு
தணலாற்றிப் பற்பக்கல் திறந்துபார்த்து
பாக்கியமாய்க் கருநிறுர் குத்திப்பாரு
பதியவது யிறங்காதே போனால்நன்றாய்
சாக்கியமாம் பருவமது ஆகும்பாரு
சலுதியாய் குப்பியெடு வெளியில்வாங்கித்
தூக்கியதைத் துணிகளைந்து யெடுத்துநன்றாய்
தொக்கவுடை நடுப்பாதி தொண்மைதானே. (182)

தேங்காயைப் போலிருக்கும் வீரந்தன்னைத்
சீறியெடு விராகனிடை யுமிழ்நீர்விட்டுப்
பாங்காகக் குழைந்துத்தங்க மேலேயிட்டு
பதியவொரு புடம்போடத் தங்கம்நீறும்
எங்காலும் வாதிமார் யிருக்குபோறார்
எடுத்துரவி நாற்றுக்கு ஒன்றுதாக்கு
சாங்கமா யேமந்தா னிந்தவீரம்
சரியான லோகமெல்லாம் பழுக்கும்பாரே. (183)

பழுக்குகின்ற வீரமதை வைத்துக்கொண்டு
பதியாக லோகத்திற் பழுக்கச்செய்து
தழைத்தகதிர் ஞானவழி யடுத்துக்கூடி
தாட்டிகமா யாறுதல மேறிப்பாரு
இழுக்கில்லா திருகாய சித்திபண்ணு
எத்தேச காலமெல்லா ரவியிலேற்றி
தொழுப்புகுந்த ஆடுபோல் வாசியோகந்
சுருதியைநீ ஆராய்ந்து பார்த்துத்தேறே. (184)

தோய்த்திடவே யிவ்வீரந் தன்னைவைத்துத்
துன்பமறக் காஞ்சனத்தைச் செலவுசெய்து
மாய்ந்திடவே போகாமல் வீரந்தன்னை
வகையாகப் பணவிடைதான் தேனிலுண்ண
சாய்த்திடவே நோயெல்லாந் தவிடதாகச்
சரியான வேதையிதைத் தாங்கினன்றாய்
காய்ந்துமே போகாது காயந்தானும்
கருத்தினிலே உறுதி யாக்கோப்சொன்னாரே. (185)

லிங்கரச கற்பூரம்.

வன்னிரச கற்பூர மொன்றுகேளு
வழுத்துகிறேன் லோகமெல்லாம் பொன்னதாக
உன்னியெடு சாதிலிங்கப் பதங்கந்தன்னை
ஒருசேரு நிறுத்துமே காசிமேரு
தன்னிலிடு பல்பக்கல் லாலேமூடித்
தக்கதுணி செய்துமே கதிரில்வைத்து
நன்னயமாய்ச் சட்டிதனில் மணலையிட்டு
நன்மையதாய்க் குப்பிதனைப் புதைத்துக்கொள்ளே (186)

பதித்துக்குப்பி வாய்தெரிய மணலையிட்டுப்
பக்குவமா யடுப்பேற்றிப் பன்னிரண்டு
விதித்தபடி சாமமெரி உயரயேறி
விடுபட்டு மூக்கண்ணன்போ லிருக்கிற்கும்
பதித்துயெடு குப்பியுடை கட்டியாகப்
பாங்காக யிருந்திடுங்காண் கற்பூரந்தான்
கெதிவேறு மில்லாதே நோய்களெல்லாங்
கீழ்க்கடலிற் புக்குமது கீர்த்திதானே. (187)

கட்டியாய்க் கற்பூரம் பலமுமொன்று
கருதியெடு கடைசீற் றேய்த்துநன்றாய்
சட்டியிடு கால்வாதி சூடந்தன்னைச்
சரியாகப் பொடிசெய்து பூரம்போலே
கொட்டிவிடு சூடத்தைக் கொழுத்திவிட்டு
குணமாக யெரியவிட்டு குறியாய்ப்பார்த்து
தட்டிவிடு யிப்படிக்குச் சிவக்கமட்டும்
தாக்கியெடு வதன்பின்பு சார்புகேளே. (188)

சிறுகண்நாகம்

காரீயம் பலமொன்று ரசமும்நேராய்
கட்டிசிறு நாகமொன்று உருக்கிசேயும்
பாரியாய்க் கரண்டிதனிற் றெளியவைத்து
பால்துத்தம் பலமொன்று பொடித்துத்தூவு
வாரியாய்த் தாளாகும் நாகந்தன்னை
வகையாகத் தூத்தமிடை போட்டுக்கிண்டு
சாரியாய்க் கரிபோலே தூளுமாகும்
சரியாகச் சுரண்டிகல்வந் தன்னிற்போடே. (189)

போட்டுமே பழச்சாறு விட்டுச்சாமம்
பொருந்தரைத்து மெழுகாக யெடுத்துப்பின்பு
நாட்டுமே கற்பூரம் மேலேரெட்டி
நன்றாகக் கவசமிட்டுக் கதிரில்வைத்து
மூட்டுமே யுமிப்புடமாய்ப் போட்டுவாங்கு
முடியவது ஆறியபின் கவசந்தன்னைக்
காட்டுமே பிரித்துயெடு கட்டிநிற்கும்
கனமான யாகோபு சொன்னவாறே. (190)

குடவன் சுத்தி.

காகதுண்டிப் பித்தளையும் பலமும்நாறு
கருதியெடு சாரம்பல மொன்றுதாக்கி
பாகமாய்ப் பொடித்துத்துணி தன்னிற்கட்டி
பக்துபோற் சுருட்டிபுடம் வைத்தெடுத்து
யோகம்வரக் குகையிலிட்டு உருக்கித்தீரு
உறுதிபெறத் தங்கம்போ லுருகிநிற்கும்
ஆகமதா யெடுத்துமறு குகையிலிட்டு
அறிவாக நாற்றுக்கு ஒன்றுதாக்கே. (191)

தாக்கிடுநீ கற்பூர மொன்றுதானும்
தடையறவே காஞ்சனமா மெடுத்துவித்து
தூக்கிடுநீ செலவுக்கு வைத்துக்கொள்ளு
தொக்கவே ஞானவழி யடுத்துப்பாரு
பாக்கியமும் வந்திடுங்காண் பூரந்தன்னில்
பரிவாகக் காயசித்தி பண்ணிநீயும்
நோக்கியே சமாதியிலே நின்றுதேறு
நொடியதாய்க் கெவுனவழி யடுத்துப்பாரே. (192)

அடுத்துப்பார் பணவிடைதா னந்திசந்தி
அதையுண்ண மண்டலத்திற் காயசித்தி
கொடுத்திடவே பேதியொடு சூலையெல்லாம்
குணமாகுஞ் சூசிகா வாய்வுபோகும்
தொடுத்தசடம் விந்தூறுகும் மேனிதானும்
தொல்லுலகில் சொகுசாவின் நிறமதாகும்
விடுத்தகசை யோடிவிடுங் கற்பூரத்தில்
வேதாந்த யாகோபு விதஞ்சொன்னரே. (193)

சொல்லிடவே குஷ்டம்பதி னெட்டுந்தீரும்
சொற்பெரிய மேகமுதல் சொல்லாதோடும்
நல்வழி யுண்டாகு மகோதரத்தை
நாசமுறப் பண்ணிவைக்குஞ் சலரோகத்தை
கொல்லவழி தேடிவிடுங் கற்பூரந்தான்
குணமாகுங் கிராணியெல்லாங் குடிவிட்டோடும்
மெல்லவொரு நீராம்பல் பவுந்திரத்தை
மெலிவாக்கும் யாகோபு விளம்பினரே. (194)

சன்னிசுரம் வாயுவெல்லாந் தணிக்குநன்றாய்
சரியாகுங் கடிவிஷங்கள் புண்கள்போகும்
உன்னிதமாம் விங்கரணம் வெட்டைபோகும்
உறுதிபெறப் பண்ணிவைக்கும் ஒருநேரத்தில்
சென்னியிலே கெங்கைவைத்த நாதன்சொன்னர்
சிறுவன்யான் பாகமதை பார்த்துத்தேறி
நன்னயமாய் மானிடர்க்குச் சொல்லிப்போட்டேன்
நலமாகும் யாகோபு நாதன்றனே. (195)

பத்தியங்கார் புளியுப்புத் தள்ளிப்போடு
பரிவான நல்லெண்ணெய் பெண்ணுகாது
சத்தியமா யிப்பூரந் தன்னைவைத்துச்
சாதித்து நவலோகம் பழுக்கச்செய்து
முத்திபெற வேகாய சித்திபண்ணு
மூவுலகும் யேறுதற்குக் கவனம்பண்ணு
புத்தியுடன் வாழ்வீர்க ளிந்நூல்தன்னிற்
புகுந்துநன்றாய்க் கண்டதலையும் பார்த்துக்கொள்ளே. (196)

அரும்பான மனத்தோர்க்கு வாதமில்லை
அறிவில்லா திருந்தவர்க்கு விவேகமில்லை
கரும்பான மனதுதனிற் கலக்கமுண்டு
காரணத்தைக் கண்டவர்க்கு எல்லாஞ்சித்தி
தரும்பான மேனிக்குத் தாச்சியுண்டு
தக்கவே பொசிப்பில்லாக் கவனமுண்டு
விழும்பாவி நரகத்தில் வீழ்கமாட்டான்
வேதாந்த யாகோபு விளம்பினரே. (197)

சீனரசக் கற்பூரம்.

மதிபெருகுஞ் சீனரசக் கற்பூரந்தான்
வண்மையாய் வைப்பதற்கு வகையைக்கேளு
கெதியுள்ள சிவன்வித்து பலமுமெட்டு
கெந்தகமும் பலமொன்று ஒட்டிவிட்டு
பதியஉமி நெருப்பதிலே உருக்கிக்கிண்டு
பதமான கத்தியினாற் கிண்டிவாரீ
சதியாகக் கரிபோலே தூளாய்ப்போகும்
தனித்துயெடு யாகோபு சொன்னவாறே. (198)

கடம்ரெண்டு வாயுரசிச் சரியாய்ச்செய்து
கருணையொடு அடிக்கடத்தில் ரசமுமிட்டு
திடமாக மேல்மூடிச் சீலைசெய்து
திட்டமா யடுப்புதனில் வைத்தெரிக்க
குடமீதி லுயரவே யேறிநிற்கும்
குணமாகப் பிரித்தெடுத்து வைத்துக்கொள்ளு
படமாகக் கரிபோலே தூளாய் நின்றால்
பதிவாக முன்போலே மூடிப்போடே. (199)

மூடியே சீலைசெய்து பின்புதானும்
முக்கியமா யெரித்துயெடு ரசத்தைநீயும்
வாடியே கல்லுப்புப் படியும்நாலு
வடிவான செங்கல்லுப் பொடியுமொன்று
தேடியே கல்லுபலி விடித்தையத்
தெரிப்படங்க வருத்திடுநீ சொல்லக்கேளு
பாடியெடு கனமுள்ள சட்டிதன்னில்
பாதியிட்டு அமுழ்த்திநன்றாய்ப் பாகங்கே...

நல்லவதை யமுழ்த்திநடுப் பள்ளம்பண்ணி
காடியெடு சாரமரைப் பழமுங்கல்வம்
செல்லஒரு பொடியாக்கிப் பள்ளந்தன்னில்
சிறக்கவிடு பொடிபரப்பி மேலேதானும்
மெல்லரசம் விட்டுசட்டி மேலேமூடி
மிருதுவா யுளுந்துமண் சீலைசெய்து
வல்லமையா யடுப்பேற்றி யங்கியிட்டு
வடிவுபெறக் கமலம்போ லெரித்துக்கொள்ளே. (201)

எரித்திடவே நாழிகையும் நூறுதன்னில்
இதமாக அடுப்பேற்றி யெரித்துவாங்கு
பிரித்திட்டுப் பாருநீ உயரயேறி
பிசகாமற் பதங்கபற்ப மாயிருக்கும்
சரித்துயெடு மயிற்குச்சி தன்னாற்றானே
சரிவரவே யெடுத்துப்பின் சாற்றக்கேளு
பிரித்துயெடு குழிக்கல்வ மிட்டுநன்றாய்
பிசகின்றிச் சொல்லுகிற வரிசைகேளே. (202)

வெடியுப்புச் சுண்ணம்.

கம்பியுப்புப் பலம்பத்து கல்வத்திட்டு
கதிபெருந்தஞ் சீனம்நேர் பொடியதாக்கி
நிம்பமது பழம்பிழிந்து நீரைப்போக்கி
நிலைமையாய்க் குருகதிந்து உப்பிலிட்டு
நம்பிநீ யிடித்துவிடு மெழுகுபோலாம்
நலமாக யெடுத்துபுது சட்டியிட்டு
தம்பிரான் செயலாலே யெரிக்கச்சுண்ணம்
தடையறவே மஞ்சளிலே போட்டுப்பாரே. (203)

போட்டிடவே சுண்ணமது ரத்தம்போலாம்
புகழான சுண்ணமிதைப் பதங்கஞ்சேர்த்து
ஆட்டிடுநீ பழச்சாறு தன்னிலேலே
அருள்பெருக வில்லைதட்டிக் கதிரில்வைத்து
நாட்டிடவே பொடியாக்கிக் குப்பிக்கிட்டு
நலமாக அரைவாசி போட்டுச்சீலை
தீட்டிடவே செய்துகதிர் காயவைத்து
தீரமுள்ள சட்டியெடு செப்பத்தானே. (204)

சட்டிதனில் நாலுவிரல் மணலையிட்டுச்
சரியாகக் குப்பிவைத்து மேலேதானும்
கொட்டிடுநீ குப்பிவாய் தெரியமண்ணைக்
கூருகொண்டு கல்மூடி யடுப்பிலேற்றிச்
சட்டமதாய்ப் பன்னிரண்டு சாமமட்டும்
சரியாக வெரித்தெடுக்கத் தவராவண்ணம்
இட்டிதமாய்ச் சீனவெடிச் சுண்ணமாச்சு
இப்படியே யாகோபு யியம்பினாரே. (205)

தப்பாது யெரித்துவிடு உயரவேறி
தலத்தில்நிற்கும் உடைத்துத்தான் கல்வத்திட்டு
செப்பமா யடியில்நின்ற புஷ்டியோடே
செனுத்தியரை பழச்சாற்றிற் றிறமதாக
துப்பரவா யரைத்துலர்த்திக் குப்பிக்கிட்டு
தூக்கிவைத்து முன்போலே யெரிக்கநன்றாய்
முப்படியா யிருக்குவிடும் யாகோப்சொன்னார்
முடிவான சீனரச பூரந்தானே. (206)

இந்தமுறை பொய்யாது சிவனுக்கொப்பாம்
இந்நீரைச் சிவனறிய யியம்பினோம்நாம்
மூந்தநகை யுண்டாகு மீசன்றானும்
முடிவாக மருந்தினாற் றீருமென்றார்
சுந்தரமாய்ப் பாகமதைக் கண்டானானால்
தொல்லுலகில் மன்னவனா யிருப்பான்பாரு
நந்திமே லாணையாஞ் செந்தூரந்தான்
நாடிமிகச் செய்திடவே பலிக்குந்தானே. (207)

அடுத்துமே சிவனங்கள் செய்யவேண்டி
அன்பாக முன்சொன்ன அயச்செம்பைத்தான்
தொடுத்துமே பாகமாய்ச் செய்துகொண்டால்
தொல்லுலகி லிருந்துமே சிவனங்கள்
தடுத்துமே செய்துகொண்டு ஒருவரோடே
தற்கமிட்டுப் பேசாம லிருந்துகொண்டு
கொடுத்துமே வித்திடுநீ செலவுசெய்து
குன்றாமல் வாழ்வீர்கள் குணமுள்ளோரே. (208)

உழுதுபயி ரிட்டாலே விளைவதாகும்
உழுகாட்டால் விளையுமோ வீணர்க்காக
அழுதுமே நின்றதினு லாபமென்ன
அதைச்சுட்டேன் பொருள்போச்சு பொய்யென்றாக்கால்
நழுகவே சொன்னதினு லாபமென்ன
நாய்கடிக்கும் வெள்ளெலும்பாம் வீணர்சொல்லு
பழுதுமே பேச்சுக்கு நரகமெய்தும்
பரனடியார் தன்னோடே பாவியாதே. (209)

அயச்செம்பு

காகதூண்டிப் பித்தளையுஞ் சேருவொன்று
கதிக்கவெடு சுருட்டிப்பந்து போலேகட்டி
பாகமுடன் புடம்போடக் கரியதாகும்
பார்த்திடுநீ கல்வத்தி லிட்டுநன்றாய்
வேகமுட னிரும்புஅர பொடியும்ரெண்டு
விதமாகச் சேர்த்தரைத்துக் குகையிலிட்டு
தாகமதா யுருக்கியிடை பீங்கானிலிட்டு
தார்ட்டிகமாய்க் கடைநீரை ஊற்றுவாயே (210)

ஊற்றிவிடு பொங்குமது கதிரில்வைத்து
ஒழுங்காகச் சாமமது சென்றபின்பு
பார்த்துவிடு பிற்பாடு கடைநீரூத்து
பதியவிடு இப்படிக்கு ஊத்தஊத்த
நேர்த்தியாய்க் கரைத்துவிடும் பீங்கான்றன்னில்
நிலையாகத் தாமெடுத்து உமியில்வைத்து
சேர்த்துவரு கல்வமிட்டு அரைக்கும்போது
சீராகக் கெந்திபலம் ரெண்டுபோடே. (211)

ரெண்டுமே யிட்டபின்பு வீரங்காலாம்
நிலையான சுடர்க்கொடியோன் பலமுங்கேளு
கண்டுநீ யரைப்பலமா யெல்லாஞ்சேர்த்து
கல்வமிட்டு அரைபாணி வில்லைதட்டி
தொண்டுபடக் கதிரில்வைத்துப் புடமுமிட்டு
தொக்கதை யெடுத்துமெல்ல உருக்கித்தீரு
பண்டுபோல் ரவியாகும் வெங்காரத்தைப்
பார்த்துயெடு பலமொன்று பரிவாய்த்தானே. (212)

பார்த்துருக்கு முகந்தனிலே இராசமிட்டால்
பதியவயச் சத்தெல்லாம் நீங்கிப்போகும்
சேர்த்துயெடு சுத்தமற அயத்தின்செம்பு
செல்வம்வரு மயச்செம்பு யிடையேவெள்ளி
சாத்திடுவீர் வெள்ளியிடை தங்கம்சேர்த்து
சாரித்து மூன்றையுந்தா னுருக்கிநன்றாய்
காத்துவடி புடத்தகடாய்ச் செங்கல்லினும்
அனிவாகக் கல்லுப்பு மூன்றுமாமே. (213)

ரெண்டுமொன்றாய்ப் பொடியாக்கிப் பாணிவிட்டு
நிலையான உண்டைபண்ணித் தகடைநீயும்
பண்டுமுன்னம் புளிகரைத்த நீரில்தோய்த்து
பதியகடு உள்ளிட்டுப் புடமுமைந்தில்
கண்டுஅது உருகுமே கட்டிநன்றாய்
காசினியில் ரெண்டுவிசை கெட்டியாகும்
கொண்டுவிற்றுச் செலவுசெய்து செந்தூரத்தைக்
குணமாக வைத்துக்கொண் டிருந்திடாயே. (214)

அயச்செம்பு பலம்நாலு குகையிலிட்டு
அதையுருக்கி நாலிலொன்று தங்கந்தன்னை
நயமாகக் கொடுத்துவிடு வாங்கிநன்றாய்
நாடியது உருகிவிடும் நாகந்தன்னை
பயனாகக் கொடுத்துவிடு வாங்கும்பின்பு
பதியஒன்று காரிகொடு உருகிநிற்கும்
செயமாக யெடுகல்வ மிட்டுநன்றாய்
செல்வம்வரப் பொற்றலையா லாட்டிக்கொள்ளே. (215)

ஆட்டியிடு சிவக்கமட்டும் புடங்களிட்டு
அருள்பெருக எடுத்தமே தருகசெம்பில்
நாட்டிகமாய் நூற்றுக்கு ஒன்றுதாக்கு
தப்பாது காஞ்சனமாம் புடமிரங்கும்
போட்டியதாய்ச் சுழக்குமெத்த செந்தூரங்கள்
புவியில்ரச வாதமா மிக்தப்போக்கு
மாட்டுயிட்டுச் செய்தாலோ வாதநேர்மை
மயமாகும் வாதியற்கு வகையதாமே. (216)

தேனிவிடு பணவிடைதான் மண்டலத்தில்
தேகசித்தி யாகும்நன்றாய்த் திறமைமெத்த
யோனிகுத்து வாய்வுகளும் சூலைபோகும்
உத்துநின்ற பித்தமுதல் வாதசூலை
வானுலகில் பறக்குமிந்தச் செந்தூரத்தை
வகைகண்டால் மேனியது தங்கம்போலாம்
ஞானமிக வந்திடுங்காண் யாகோப்சொன்னார்
நாடினால் சகலமுந்தான் சித்தியாமே. (217)

போதுவிதி.

சித்திக்க வேணுமென்று விரும்பைநன்றாய்
சேர்த்தெடுத்து அயச்செம்பு செய்துகொள்ளு
மூத்திக்கு மேமத்தைச் சேர்த்துநீயும்
முனிவாகப் புடம்போடு வாதமாகும்
பத்திக்கும் நாகத்தைக் கால்கட்டாக
பதமான பாகமாய்ச் செய்துகொள்ளு
நத்திரச வாதமாம் யோகம்ஞானம்
நானிலத்தில் வந்திடுங்காண் நாடிப்பாரே. (218)

போய்வாதி.

நாட்டிலே ரசவாதம் பொய்யென்பார்கள்
நன்மையுள்ள நூலறியார் நலமில்லாதார்
கூட்டிலே உயிரிருந்தும் பொருளைக்காணார்
கூட்டமிட்டுப் பேசுவார் குணங்கெட்டோர்கள்
யேட்டிலே யெழுதிவைத்தார் சித்தரென்பார்
யிதமாக யெல்லாம்பொய் யென்றபேர்க்கு
போட்டிடுவா யவன்வாயில் மண்ணைத்தானும்
புலம்புவார் தெருவாசல் புலையர்தானே. (219)

நன்மைசொன்னால் தின்மையென்பா ருலகத்தோர்கள்
நாட்டில்நின்ற வேரிலையைப் பிடுங்கிப்பார்த்து
தன்மையா யிம்மூலி சரக்கைக்கட்டுந்
தடமாக நீற்றிவிடு மென்பார்பாவி
வன்மையுள்ள புடம்போட வோடிப்போகும்
வகையான மூலிகைக்குச் சாபமென்பார்
கன்மமுள்ள கசடரவர் மூலிதன்னைக்
காணாமல் காடெங்கு மலைகுவாரே.

சரக்குக்கட்டு

மாண்டுமே போகாமல் புகைநீர்தன்னை
வைத்தெடுத்துச் சுருக்கிடவே சரக்குக்கட்டும்
தாண்டுமே வெடியுப்புச் சுண்ணம்பண்ணி
சார்வாகச் செயநீரை வைத்துக்கொண்டு
ஆண்டுமே சரக்குகளைச் சுருக்குத்தாக்க
அன்புடனே கட்டியது மெழுகுமாகும்
கூண்டுமே ரவிதனிலே வேதையாகும்
குணமாக யாகோபு கூறினாரே.

கூறினார் நல்லோர்கள் பிழைக்கத்தானும்
குற்றமில்லார்க் கொன்றுமில்லை கூறினாலும்
தேறினால் ரசவாதம் வரமாட்டாதோ
தேசத்தி லிந்நூல்போ லொன்றுமில்லை
மாறினால் நாலவனுந் தெரியமாட்டான்
மயக்கமுற்று அலைவார்கள் மாயக்காரர்
மூரியே முரட்டுமன முடையோர்க்கெல்லாம்
முத்தியில்லை யென்றுசொன்னார் யாகோபுதானே.

கேந்திகாரி செம்பு வேதை.

கெந்தகமும் பலமொன்று கல்வத்திட்டு
கிளரியவரை யிக்கிடைசேர் சூதந்தன்னை
மூந்தவரை சாமமொன்று பழச்சாற்றாலே
முன்புபெறக் குப்பியிட்டு மேரில்வைத்து
சிந்தனைகள் வாராது சாமம்காது
சிறக்கவெரி கரிபோலே மேலேயேறும்
பந்தமாக் குப்பியுடை கல்வமிட்டு
பதியவரைச் செங்கிரைச் சாற்றாலாட்டே.

ஆட்டியரை யிருசாமம் உண்டைபண்ணி
அதைக்கதிரிற் காயவைத்து ஆண்மைகேளு
மீட்டிகுகை தன்னிலிட்டுக் காரீயத்தை
மிகவுருக்கி யிடைக்கிடை தான் முனிக்தேயிந்து
தேட்டிலென்ன வயனமாங் கரியாய்ப்போகும்
திடமாக விக்கரிக்குச் செம்புசேர்த்து
நாட்டிகுகை தன்னிலிட்டு உருக்கியூத
நலமான யாகோபு நவின்றிட்டாரே. (224)

செம்பதுவுஞ் சொகுசாப்போல் நிறமுமாகும்
சிறக்கவெடு யிடைக்கிடை தான் யேமமீய்ந்து
நம்பியதை உருக்கியிடு வெள்ளிதன்னில்
நாட்டியிடு யெட்டுக்கு ரெண்டுதானும்
பம்பரம்போ லுருக்கியதை யூதிப்போட
பரிவாக யெட்டாகு மாத்துத்தானும்
அம்புவியி லிதைவிற் றுச் சிலவுசெய்து
ஆண்மைபெற ஞானத்தை அறிந்திடாயே. (225)

அறிந்துயிந்தச் செம்புதனை வைத்துநீயும்
அடவாகச் சிலவுசெய்து பெரியவேலை
குறித்துயெடு செந்தூரம் பண்ணி நன்றாய்
குணமாக உண்டுவிடு காயசித்தி
அறிந்திடவே ஆயிபதம் பூசைபண்ணி
அன்பாகக் களங்குமுதல் மயமுங்கண்டு
செறிந்திடவே யிருந்திடுவீ ரென்றுஞான
தேசிகனுர் யாகோபு சொன்னவாரே (226)

அயச்சத்து

கல்லிரும்பு அரைபொடியு நேரேதானும்
நாட்டியிடு துருசதுவுங் கல்வத்திட்டு
சொல்லவரை பழச்சாற்றால் கதிரில்வைத்து
சுடுகுகையி லிட்டுருக்கு சத்துமாகும்
மெல்லவதை யெடுத்துயிடை துருசச்செம்பை
மேன்பெறச் சேர்த்துருக்கு மணியதாகும்
சொல்லவதை யூதியெடு செம்புமாகும்
தொல்லுலகில் ரசவாதி பிழைக்கத்தானே. (227)

ஆசனாரு சச்செம் புருக்கித்தங்கம்
அந்தயிடை தகடாக அடித்தபின்பு
வாசிபெறக் கெந்தகமும் பலமுமொன்று
வடிவாக வீரமது பலமுங்காலாம்
வீசியவோ பழச்சாற்றால் சாமமாட்டி
விசையாக மெழுகுபதங் கதிரில்வைத்து
காசியென்ற குப்பிதனி லடைத்துமேரு
கணக்காக யெரித்திடவே களங்கமாமே. (228)

எரித்திடவே மேலேறிக் கரியாய்நிற்கும்
யிதமாக வளித்துயெடு பழச்சாற்றாலே
விரித்துஅரை மூன்தகட்டி விடையேபூசி
விரிகதிரோ னிடம்வைத்துப் புடமுமிட்டு
சரித்துயெடு நொருங்கமட்டும் புடைத்துப்போட்டு
சரியாக யெடுத்துமெள்ள சாற்றக்கேளு
குரித்துநீ பற்பம்வைக்க யாகோபுசொன்னார்
கொட்டினார் மூன்றாற்றின் குணமிதாமே. (229)

மதியெட்டில் ரெண்டிடுநீ குருவைத்தாலும்
மயமாகக் காஞ்சனமா மெடுத்துக்கொள்ளு
விதியெட்டில் வாசியைத்தா லுருகினான
வீதிதனி லேறிச்சுற்றி விதமதாக
பூதியவிற் றுச் செலவுசெய்து பரங்கட்கப்பா
பண்புடனே யன்னமிடு பாலாற்போடு
கதியைநினை ஒருவருக்குந் தெரிந்திடாமல்
காட்சிபெற யிருந்திடுநின் கடனிதாமே (230

இனமுடனே சேராத வாதிதன்னை
யிருக்குதென்று சொல்லாதே யின்பமாகத்
தனமுடைய லோகத்தா ருன்னைத்தாலும்
தலைபோகப் பார்த்திடுவார் தடையேயில்லை
கனவிலும்நீ நினையாதே முகஞ்சோர்ந்தாப்போல்
கருத்தினிலே நினைத்திருக்கக் கருணையாகும்
குணமுடையோ ராயிருந்தால் மகிழ்ந்துசொல்லு
குற்றமுள்ள வாதியென்றால் முகம்பாராதே. (23

உலகுள்ளோ ருனையடுப்பா ருண்மைகேட்பார்
உருதிபெற உபகாரஞ் செய்வார்பொல்லார்
விலகிவிடு அவன்முகத்தைப் பார்த்திடாதே
விரும்பியுனை நிழல்போலே காத்திருந்தால்
தலமாகச் சாக்கினுட வைப்புச்சொல்லு
தாட்சிபெறப் பிச்சையெடுத் துண்டுவாழு
குலமதிலே தள்ளிடுவா ரிருக்கத்தக்குங்
குருவிதியாய் நாளினிற் சமாதிநில்லே. (232)

நில்லென்றார் ரசவாதங் குபேரன்வாழ்வு
நிலைத்ததென்றால் சிவரூபம் நிலைவிலெண்ணி
அல்லென்ற ஆண்டவன்றன் பொக்கிசத்தை
அரிந்தாலு மனதடங்கி மிடியனுகி
சொல்லெனவே திரிந்துவிடு லோகத்தோர்க்கு
செயமான மயக்கமில்லை செரிதாய்வாழு
கல்லெடுத்து ஆகாச மெரிந்தாற்போல
கடுமைபெறத் திரிந்தாலே உயிரும்போமே. (233)

வெள்ளிதங்கந் தனையெடுத்து ரசவாதத்தில்
வித்தகமாய்க் கைவிட்டு வெளியில்விட்டார்
துள்ளியதை மானிடர்க ளொருவர்தானும்
தூக்கியிந்தப் பொருள்கொண்டு போகத்தானும்
கள்ளனவன் பொருள்களைத்தான் வாரவேண்டி
கனிந்துஉயிர் போகியே கொண்டுபோவான்
உள்ளபடி ரசவாதம் கண்டோர்தன்னை
உயிர்வதைக்க நினைப்பார்க ளுலகத்தாரே. (234)

ஒருதரந்தான் கைபாகந் தப்பினுக்கால்
உடன்பிறகு செய்திடவே பாகமாகும்
இருதரமுந் தப்பினு லின்னமொன்று
பின்பமாய்ச் செய்துவிடு பாகமாகும்
கருவரியா ரொருபோது மரியமாட்டார்
கண்காட்டத் தெரியாது கனிவில்லார்க்கு
பருவமுட னூலரிந்தால் பதியும்நெஞ்சில்
பகுத்தறிந்தால் வாதவித்தை பலிக்குந்தானே. (235)

நாட்டிலுள்ள வாதியர்கள் சொல்லும்நேர்மை
நானறிவேன் ரசவாதமென்று சொல்லி
மூட்டியவர் பொருள்வாங்கித் தின்னுதானும்
முடியமட்டும் பொய்சொல்லு மூட்டுவாதி
எட்டிவில்லை யென்றுகுரு உபதேசித்தார்
எளிதாக யிருக்குதென்று சொல்வார்மட்டை
சாட்டியடித் தாலவர்க்குப் பாவமில்லை
சதிசொன்னார் நரகமதி லெய்துவாரே. (236)

வனத்திலுள்ள மூலிகையைத் தேடித்தேடி
வதைத்துமே பிடிங்கிவந்து பாஷாணத்தில்
நினைத்தபடி சுருக்கிட்டுக் கவசங்கட்டி
நிலந்தனிலே புடமிட்டே ஓடிப்போக
தனைத்திந்த நூல்பொய்யாய்ப் பாடினார்கள்
கருப்புகாய்க் குகைத்தப்போற் சொல்லிச்சொல்லி
முனைத்துடனே [illegible]ர் சோத்துக்காகும்
முக்கியமாய்ச் சுட்டனென்பார் உண்மைதானே. (237)

கண்டவர்கள் சொல்வாரோ கல்நெஞ்சோர்கள்
கருத்தரியார் சொல்வார்கள் கருத்தையெண்ணி
தொண்டர்களாஞ் சிலபேர்கள் நல்லோர்போல
தொல்லுலகி லிருப்பார்கள் சோதித்தேபார்
பண்டவர்முன் பக்கமது போலேபேசி
பார்த்துநீ யவனுன்முன் பகர்ந்தபேச்சை
தொண்டனாய் நினைவில்வைத்துத் தள்ளிப்போடு
தொல்லுலகி லிப்படிக்குச் சோதித்தேரே. (238)

கெந்திரசச் சூரணம்.

கெந்தியெடு பலம்ரெண்டு கல்வத்திட்டு
கிளாவரை சூதம்நேர் சேர்த்துநீயும்
மூந்தியாரை மையதாம் பொடியதாக்கி
முக்கியமா யரைத்தபின்பு சொல்லக்கேளு
தந்திவிரை தோல்போக்கி வறுத்துநன்றாய்
தனைமூன்று சரக்கதனை யரைத்துக்கல்வம்
சிந்தனைகள் வாராமல் பழச்சாராட்டி
சிறந்துகதிர் காயவைத்துச் சொல்லக்கேளே. (239)

காயமவைத்து முக்கண்ணன் குடுக்கைதன்னில்
　　கனமாக அடைத்துவைத்துக் கேளுஞானம்
ஞாயமதாய்த் தேனிவிடு பணமவ்விதம்
　　நாடியொரு மண்டலத்தில் நசையும்போதும்
மாயமாய்ப் புளியுப்புத் தள்ளிநீயும்
　　மகிமைபெற வுண்டுவா வியாதிதானும்
சேயவே கதிர்கண்ட பனிபோலாகும்
　　திடமாக யாகோபு செப்பினாரே. (240)

குன்மவலி மகோதரங்கள் சூலைநன்றாய்
　　குணமான வாதமொடு பித்தம்போகும்
நன்மைதரு மூலத்தி லுள்ளவாய்வு
　　நாடாது பறங்கியென்ற புண்ணும்போகும்
சென்மவினை தீர்ந்துவிடும் செகத்திற்றானும்
　　சித்தியதாம் பெரும்பாடு தலைநோக்காடு
கன்மவினை யிவையெல்லாந் தீருமென்று
　　கருத்துணர்ந்து யாகோபு கருதினாரே. (241)

எளியோரும் பண்டிதர்கள் பிழைக்கநன்று
　　யினியிந்த வயித்தியத்தை யிரக்கமாக
களிவாக யிம்மருந்தைக் கடோசிதன்னில்
　　கருத்துவைத்து உபதேசம் சொன்னேனப்பா
வளியாகச் செய்துமண் டலமேயுண்ண
　　வடிவளிக்குந் திமிர்குஷ்டம் ரண்டும்போகும்
பளியாகச் சொல்லவில்லை பதிவைப்பார்த்து
　　பகர்ந்துணர்ந்து பண்டிதத்தைப் பார்த்துக்கொள்ளே (242)

அப்ரேகச் செந்தூரம்.

அப்ரேகம் பலப்நாலு கல்வத்திட்டு
　　அரைக்கலாம் விரமது பாணியாலே
தப்பாவே அரைக்கவது வெண்ணெய்யாகும்
　　தனையெடுத்துப் புடம்போட்டு யெடுத்துக்கொள்ளு
செப்பமுடன் தாளகமோ ஒட்டிரெட்டி
　　செயமாகக் கட்டியபின் கதிரில்வைத்து
தப்பறவே புடம்போடு அவன்கைக்கேறும்
　　துடியான யாகோபு சொன்னவாறே. (243)

காட்டிலே விராட்டிரெண்டு சுற்றிலுந்தான்
நலமாக முறித்தடுக்கிச் சாணதாநீளம்
கூட்டிநடுக் கும்பம்போ லிட்டுக்கொள்ளு
குணமாகக் கிளிஞ்சிநீர் நிரையவிட்டு
மூட்டிநடு வுண்டைதனை நடுவிலிட்டு
முனையவதன் மேலிடுநீ கிளிஞ்சிநீற்றை
காட்டிவிட்டு அதின்மேல்வி ராட்டிரெண்டு
கனிவாக யிட்டுஅங்கி தன்னைப்போடே. (244)

போட்டுநீ நெருப்பதுவும் பிடித்துவெந்து
புக்கிவரும் நடுச்சமயம் பொருந்திப்பார்த்து
தாட்டிகமா யணைத்துவிடு வுண்டைதன்னை
தானெடுத்துப் பிழிந்துவிடு தாரந்தானும்
மாட்டியது சிவந்துசெந் தூரமாகும்
மகிமைபெறக் கல்வத்தில் சாமமொன்று
ஆட்டியெடுத் தன்பாக வைத்துக்கொண்டால்
அதன்பின்பு செய்யும்வகை யறையக்கேளே. (245)

ஒன்றாக வரைத்துத்தந்தி விரைதோல்போக்கி
ஒக்கவிடு தாரம்நேர் பழச்சாறூட்டி
நன்றாகச் சாமம்நா லரைத்துப்பின்பு
நகைநீரிற் காயவைத்து கல்வத்திட்டு
மன்றாகப் பொடித்துலைத்துக் குடுக்கைதன்னில்
மகிமைபெற வடைத்துப்பின் வகையைக்கேளு
நன்றாகப் பணவிடைதா னந்திசந்தி
நலமாகத் தின்றிடவே நகைகள்போமே (246)

காசம்நோ யெலிகடியும் பீனோநன்றாய்
கருதவே வாயுவெல்லாம் கடலேபுக்கும்
பாசமினை வாயுவெல்லாம் படிந்துநன்றாய்
பதிவாகும் பீனிசத்தின் காசம்போகும்
நேசமா மந்தார காசம்போகும்
நிலைநின்ற பித்தமொடு காசம்நன்றாய்
வாசமனு தினமுண்டாம் யாகோபுசொன்னார்
வகையான கைபாக வரிசைதானே. (247)

உப்புடனே புளிதள்ளி யுண்டபேர்க்கு
உறுதியுள்ள யிவ்வகையாம் நசைகள்தீரும்
செப்பமுள்ள புகையிலையும் பெண்ணுந்தள்ளு
செயமான கடுகுதள்ளி யுண்டுதேரு
கைப்புள்ள பதார்த்தமெல்லாந் தள்ளியுண்ணு
கடல்புக்குஞ் சிலேற்பனங்கள் காணாதோடும்
செப்பினேன் முன்னூறிற் செயமதாகும்
செவ்வையா யாகோபு சொன்னார்தானே. (248)

கெந்திப் பதங்கம்

வீரங்கால் கெந்திமுக்கால் ரெண்டுஞ்சேர்த்து
விதமாகப் பழச்சார்விட் டரைத்துநீயும்
பாரமாய்க் கதிரில்வைத்து உலர்ந்தபின்பு
பதமாகக் கடமீது போட்டடைத்து
கோரமாய் மேல்மூடி யுருந்துச்சீலை
குணமாகச் சீலைசெய்து கதிரில்வைத்து
ஆரவே நிழல்போலே யெரிக்கயேறும்
சத்தியமா யெடுபிரித்துச் சாற்றக்கேளே. (249)

சுத்தவரை பொடிபலமாந் துருசுபத்து
சுருதிபெற வைத்துடனே கூடச்சேர்த்து
பத்தியொடு முன்பதங்கம் மயம்நேரிட்டு
பதிவவரை பழச்சாற்றால் சாமம்நாலு
வித்தகமா யரைத்துசிறு குகையிலிட்டு
விதமாக வெங்காரங் கொஞ்சம்போட்டு
சித்திபெற உருக்கிடவே மதிபோலாகும்
செயமாக யாகோபு சொன்னவாறே. (250)

துருசுச் செம்பு.

உருக்கியெடு ஐந்துதரங் காரமிட்டு
ஒழுங்காகச் செம்பதுதான் கதிர்போலாகும்
பெருக்கியெடு கரியில்நன்றாய் வைத்துருக்கு
பிசகற்ற குகையிலிட்டு உருக்கும்போது
நருக்கெனவே தங்கமிடை சேர்த்துருக்கு
நலமாக யெடுத்துடைத்து நாடிக்கேளு
முருக்கெனவே உடையுமந்தச் செம்புதானும்
மூவுலகு மெச்சுமந்தச் செம்புதானே. (251)

மதியுருக்கு மெட்டுக்கு ரெண்டுசெம்பு
வகையாகச் சேத்துருக்க மாத்துயேழு
பதிவாகச் சிவவேடந் தரித்துநீயும்
பத்தியொடு வித்துடனே சிலவுசெய்து
நதிபலவுஞ் சுத்திவெகு முறையைக்கேளு
நாட்டிலுள்ள வாதிகளைக் கண்டுபேசு
கெதிவேறு மில்லையென்று சொல்லிநீயும்
கிரகித்துப் பாகமதைக் கேட்டுக்கொள்ளே. (252)

கேட்டுவெகு பாகத்தைக் கூட்டித்தள்ளிக்
கிடைத்தமட்டும் வாங்கியே கொண்டுநீயும்
தாட்டிகமாய்ப் போகாமல் மனதிலெண்ணி
சாஸ்திரங்கள் நூல்பலவுஞ் சம்பாதித்து
வாட்டிபல சரக்குகளை வைத்துப்பாரு
வடிவுபெறப் பெரியோராம் வேடங்கொண்டு
தேட்டிலென்ன சம்பாதி யென்றுயெண்ணி
திடமாக யாகோபு சொன்னவாரே. (253)

பெரியோரைக் கண்டுவெகு பேச்சுப்பேசி
பிணக்கறுத்து விபரமதாய்ப் பேசிநீயும்
அரியாத பேர்களைப்போ லிருந்துபேசு
அடவான கைபாகம் அரிந்துபேசு
சரியாக மனுஷனுட னேர்மைபார்த்து
சாஸ்திரங்கள் பலபலவா முறையுங்கேளு
பிரியாம லிருந்துவெகு நேரந்தானும்
பெரியோரைப் பாகமது விரும்பிக்கேளே. (254)

சிவனுடைய விந்துதான் பலமும்நாலு
சித்தண்டத் தோட்டையுங் கல்லுப்போடு
கவனமுடன் செங்கல்மா வகைக்கிக்காலாய்
கல்வமிட்டுச் சாமமொன்று தானுமாட்டு
தவமாக யெடுத்துக்கட மீதிலிட்டு
தன்மைபெற யெரித்திடவே மேலேயேறும்
பவமாக மேற்றூண்டி பிரித்துநீயும்
பண்பாக ரசமெல்லாம் வளித்திடாயே. (255)

## மனோசிலைரசப்பதங்கம்.

சிவந்திருக்கு மனோசிலைதான் பலமும்நாலு
சிறக்கவதைக் கல்வத்திற் பொடித்துநீயும்
கவனமாய் ரெண்டுகடர் தன்னைத்தானும்
கனத்திடவும் வாய்தேய்த்து அடுப்பிலேற்றி
நலமான காரியம் உள்ளேயிட்டு
நலமுடனே உருக்குமுகர் தனிலேநீயும்
தவம்பெறவே மனோசிலையை யிட்டுமூடி
தனிவாக மண்சீலை வலுவாய்ச் செய்யே. (256)

உளுந்துமண் சீலைசெய்து சாமந்தானும்
உருதிபெற வெரியிட்டவே யுயரவேறி
குளுந்திருக்கு மனோசிலையாம் பதங்கந்தன்னைக்
கூட்டியெடு பலமொன்று சூதம்நாலு
தழுந்திடவே யிவைரெண்டும் புரம்பாய்வைத்து
தளுக்கில்லாக் கல்லுப்புப் படியும்நாலு
அழுந்தவதை யிடித்துசெங்கல் மாவுமொன்று
அடைவாகச் சட்டியிட்டு வறுத்துக்கொள்ளே. (257)

வருத்தெடுத்துப் புதுச்சட்டி தன்னிலிட்டு
வகைபெறவே நிறையாக வுப்பமுழ்த்தி
நிருத்துமுன்னே யிருக்கின்ற ரசமூந்தாரம்
நிலைக்கவே நடுவிலிட்ட பள்ளந்தன்னில்
ஒருத்துவிடு மேலாகச் சட்டிமூடி
ஒக்கவிடு அடுப்பிலிடு உருதியாக
சிருத்துயெரி கமலம்போல் நாறுநாழி
சிறுகவது யெறியே பதங்கமாமே. (258)

பதங்கத்தை வழித்துஒரு சிமிளிலிட்டு
பணவிடைதான் மதுவிலிடு ஆறுநாள்தான்
விதமான சயகாசம் பித்தகாசம்
விருப்பமுள்ள வாதமது வாங்காதோடும்
அதமான சிலேற்பனங்கள் தொண்ணூற்றாறும்
ஆண்மையுள்ள மந்தார காசத்தோடு
பதமாகும் பீனிசமும் காசந்தீரும்
பகர்ந்துரைத்தார் யாகோபு பரிவாய்த்தானே. (259)

உண்டபின்பு பத்தியர்தா னுருதிகேளு
உண்மையுள்ள புளியாகா துப்பாகாது
கொண்டபெண்ணு மாகாது கூத்தியுள்ளி
கொடுமையுள்ள எருமையுட மோராகாது
பண்டுசெய்யும் பழையதாகாக் கஞ்சிகாய்ச்சிப்
பத்தியுடன் திரிகாரு முண்டுதேறு
கண்டதோர் பதார்த்தமெல்லாந் தள்ளிநீயும்
கருத்தாக உண்டிடவே கருதுவாயே. (260)

அயச்சத்துச் செந்தூரம்.

இரும்பினரப் பொடிதனையுங் கல்வத்திட்டு
யிதினிடைக்குத் தாளகத்தை யியல்பாய்ச்சேர்த்து
அரும்படியா யரைபாணி யதனினாலே
அரைத்துப்பின் கதிர்முன்னே காயவைத்து
தரும்படியாய்ச் சடுகுகையில் வைத்துருக்க
தனியான மணிபோலே யுருகிநிற்கும்
பெரும்படிக்குப் பதினாறி லொன்றுகாரம்
பிரிவாக விட்டரைத்துப் பின்புகேளே. (261)

பின்புகுகை தன்னிலிட்டு உருக்கித்திரு
பிசகறவே உருகியொரு மணியாய்நிற்கும்
தென்புடனே பொற்றலையின் சாற்றாலாட்டி
திடமாகக் கதிர்முன்னே காயவைத்து
நன்மைபெறப் புடமூன்று போட்டெடுத்து
நாட்டியிடு பாதிச்சவ் வீரந்தன்னை
இன்மையொடு முன்சாற்று லரைத்துவில்லை
யெரிகதிர்முன் காயவைத்துப் புடத்தைப்போடே. (262)

புடமூன்று போட்டெடுக்கப் பவளமாகும்
புகலரிதா யெடுத்ததைநீ புரம்பாய்வைத்து
திடமாகக் காரீயம் பலமும்காலு
திரும்பவதைத் தகடடித்துப் பிச்சப்போடு
படஅரைநீ அன்னத்தாற் சாமமாட்டி
பதியவதை வில்லைதட்டிக் கதிரில்வைத்து
கடமாகப் புடமூன்றில் மஞ்சளாகும்
காடியிடு மென்றுசொன்னார் யாகோபுதானே. (263)

எடுத்தரைத்து யிப்படிக்குப் புடமுமிட்டு
யிதமாகப் போட்டிடவே மஞ்சளாகும்
தொடுத்துஒரு நிறையாகும் அயச்செந்தூரம்
துணிவாக யிடைசேர்த்து அன்னத்தாலே
அடுத்துவரை புடமூன்று போட்டெடுக்க
அதுமுருக்கம் பூப்போலே யாகும்மேனி
கொடுத்தாவி ரெண்டிடையாம் குருவுமொன்று
குலமாகச் சேர்த்துருக்கக் குணமதாமே. (264)

உருக்கியுடை ஞெருங்கிடுமாம் வெள்ளியேழில்
உருவாகக் குருசெம்பு மூன்றுசேர்த்து
நெருக்கியிதைக் கரியில்வைத்து உருக்கியூது
நிலையான தங்கமது யிடையேசேர்த்து
பெருக்கியிதை உருக்கிடுங்காண் ஊதிப்போடு
பெருமையுள்ள தகடடித்துப் பின்புநீயும்
கருக்கிடையாய்ப் புடமிடுநீ நாள்தப்பாது (265)
கனிவாக மூன்றுருங் கண்டுகொள்ளே.

கண்டந்தத் தகட்டைவைத்துப் புடமுமூன்று
கருதியிட அருகுகட்டுங் கணக்காய்நன்றாய்
தொண்டுபட ஆவரம்பூ நிறமதாகும்
தொடுக்கயெடு காஞ்சனமாம் வித்துநீயும்
பண்டுபடச் செலவுசெய்து தன்மம்பண்ணி
பதிவாக ஞானத்தி லடுத்துக்கூடு
மூண்டுசெய்ய வேண்டாங்காண் யாகோபுசொன்னார்
முனிந்துஅவர் பேர்விளங்கு முறையிதாமே. (266)

வழியோடு சுழிமுனையில் மருவியாடு
வையகத்தில் வயித்தியத்தை வலுமையாக
கழிவாகச் செய்யாதே கணக்கப்பண்ணு
கருத்துவைத்து சிவயோக வழியில்நில்லு
பழியாகச் சொல்லாதே நூலைப்பாரு
பதிவான பாகமது பகர்ந்தநேர்மை
விழிமடவார் தம்மைநம்பி யிருக்கவேண்டாம்
வேதமதை நம்பியே யிருந்திடாயே. (267)

விரும்பியிந்த முன்னூற்றை மிகவும்பார்த்து
வேதமறை யடியதனைச் சோதித்தேறு
வரும்புகழை வன்மமதைக் கண்டுகொள்ளு
வாதாடித் திரியாதே வலுமைபேசி
இரும்புதனை ஊதிடவே வாதந்தேறும்
யெடுத்தகுறி தப்பாது யியல்புமெத்த
தரும்புகளா யிருந்துநல்ல யோகம்பாரு
தந்தையாம் யாகோபு சாற்றினாரே. (268)

செந்தூரந் தேனிலுண்ண மண்டலத்தில்
சிறுலயதாம் நரைதிரைகள் தெரிகெட்டோடும்
விந்திருகும் பெலனுண்டாம் வியாதியெல்லாம்
விடுபடுங்காண் மேனியது அலரிப்பூவாம்
முந்தும்வினை தீர்ந்திடுங்காண் முத்தியுண்டாம்
முன்னூற்றின் ரசவாத மூர்க்கமெத்த
சிந்தைதனி லெங்கோரந் தென்புண்டாகும்
சித்திபெற யாகோபு சொன்னவாரே. (269)

வாதம்வந்தா லவன்குடும்ப மெல்லாந்தானும்
வகையாகப் பிழைத்திடுங்காண் வலுமையாக
நீதம்வரும் ஞானங்கள் செல்வமுண்டாம்
நிலைத்திடுங்காண் தேகமது சொர்ணமாகும்
ஆதரவாய் கனலெழுந்த கதைபோலாகும்
அடுத்தவர்க்குப் புகழுண்டாம் ஆண்மைமெத்த
போதம்வரு மெஞ்ஞானம் புகழுண்டாகும்
போக்கறிந்து யாகோபு பலன்சொன்னாரே. (270)

வங்கச் சேந்தூரம்.

நயமாகக் கருவங்க முருக்கிநீயும்
நாடிய அன்னமென்ற நீரிலேழு
பயமாகச் சாய்த்துமே குகையிலிட்டு
படவுருக்கி யிடைக்கிடைதான் கெவுரிசேர்த்து
மயமாக உருக்கிடவே வெட்டையாகும்
மதித்தெடுத்துக் கல்வமிட்டுப் பின்புநீயும்
வயமாகு மன்னமென்ற சாற்றாலாட்டி
வலுமைபெறப் பெரும்புடமாய்ப் போடுவாயே. (271)

போட்டுயெடு கல்வமிட்டு அன்னத்தாலே
பொருந்தவதை யரைத்துரவி காயவைத்து
காட்டுபுட மிப்படிக்குச் சிவக்கமட்டும்
கதிர்பெறவே புடமிட்டு யெடுத்துவைத்து
காட்டினிலே சொல்லாதே முறைகள்தன்னை
காதாக்கள் சித்தரவர் சபிப்பார்சாபம்
பாட்டதனிற் றேய்ந்தாக்கார்ப் பலனுண்டாகும்
பக்திதரும் யாகோபு பகர்ந்தவாறே (272)

கொள்ளுயிடு படிபாணி நாலுவிட்டு
குணமாக யெரித்துயெட்டி லொன்றாய்க்காய்ச்சி
மெள்ளயிடு காந்தமது பலந்தானொ
மெதுவாகக் கல்வமிட்டுக் கிஷாயத்தாலே
துள்ளவதை யரைத்துவில்லை கதிரில்வைத்து
தூக்கியெடு புடமூன்று போட்டெடுக்க
கள்ளமறப் பண்ணுமது கல்வமிட்டு
கருணைபெற முன்னீரி லரைத்துக்கொள்ளே. (273)

அரைத்துவில்லை ரவியில்வைத்துப் புடமுமிட்டு
அதையெடுக்கப் பவளநிற மாகுமாகும்
குறைத்ததிந்தப் படியாகப் புடமுமைத்து
கொள்கையிடப் பவளமுமாம் குணமுள்ளோர்க்கு
வரைத்துயெடு காந்தசெந் தூரம்நேரே
வலுவாகக் காரியசெந் தூரஞ்சேர்த்து
உறைத்துஅரை வில்லைதட்டிக் கதிரில்வைத்து
ஒழுங்காகப் புடமிரண்டு போட்டுக்கொள்ளே. (274)

போட்டுயெடு முன்னீரா லரைத்துநீயும்
போக்கோடே தாளகத்தின் மேலேஅங்கி
பூட்டிவிடு காயவைத்துப் புடமும்போட்டு
புகழாக யெடுத்துக்கல்வ மிட்டுநன்றாய்
காட்டிவிடு துருசுனுட செம்புனூற்றில்
கனிவாக ஒன்றிட்டு உருக்கிப்பாரு
தேட்டுரெம்பக் காஞ்சனமாம் நேர்மைகண்டு
தீரமுள்ள ரசவாதத் திறமைதானே. (275)

செந்தூரம் பணவிடைதான் தேனிலுண்ணச்
சிறுகதிர்போல் மேனியாஞ் சாவேயில்லை
வந்தபிணி வாதமெல்லாம் மதித்தோடும்
வகையான பித்தமொடு சிலேற்பனம்போம்
சந்ததமு மிளமையைப்போ லிருக்கலாகும்
சத்திவலி குன்மங்க ளெல்லாஞ்சாகும்
மூந்தவினை தீர்ந்துவிடும் யாகோபுசொன்னார்
மூத்திதரும் மூன்னூற்றில் முறையைப்பாரே. (276)

பெண்ணோடு புளிதள்ளி வாழைக்காயைப்
பொதுவாகத் தள்ளிவிடு மீனைத்தள்ளு
கண்ணுடனே செம்மறியுங் கருகித்தள்ளு
காய்ந்தவகை யிறைச்சிதள்ளு கருணைகூறு
மெண்ணுதிண்ணு மரிசியதின் மாவுதள்ளு
மேதினியில் மாங்காயை மிகவுந்தள்ளு
உண்ணுவிடச் செந்தூர முறுதிமெத்த
ஓதினார் யாகோபு உலகத்தோர்க்கே. (277)

வாதம்வரும் வழியாகப் பார்த்துத்தேறி
வகைபெறவே களங்கினுடன் தங்கஞ்சேர்த்து
நீதமாய்ப் புடம்போடு புடமிரங்கும்
நிலைத்துநிற்கும் தங்கமது நிசமதாகும்
சேதம்வரா வேதையிது செயமதாகும்
சித்திமுத்தியாகுமிது செகத்தில் நன்றாய்
வேதமதில் சொன்னதிந்த மார்க்கந்தன்னை
வெற்றிபெற யாகோபு விளம்பினாரே. (278)

சிவசொத்தை வருமையறச் செய்துகொள்ளு
சித்தரோ டொப்பாக யிருந்துநன்றாய்
தவமாக யிருந்துவிடு ஞானந்தன்னை
தாக்கியதை நினைவாகப் பார்த்துநீயும்
கவனமுடன் ஆயுதலங் கண்டுநேசி
கருத்துறவே யோகநிலை காணுநன்றாய்
சவம்போலே கிரியாதே யென்றுசொல்லி
தன்மையுள்ள யாகோபு சாற்றினாரே. (279)

கருத்துணர்ந்த பெரியோரைக் கண்டுபேசி
கலந்துரச வாதவித்தை கனிந்துகேட்டு
வருத்தமில்லா வகையாகச் செய்துகொள்ளு
வளமையுள்ள ஞானத்தைக் கருத்திற்கூட்டி
யிருத்தியிரு வாசியைநீ கும்பித்தேறு
யேற்றமுள்ள பொரிதோனும் அப்பாற்றானும்
பொருத்தமதாய்த் தொட்டதெல்லாம் சித்தியாகும்
புகலாதே யென்றுசொன்னார் யாகோபுதானே. (280)

உளிசெந்தூரம்

உளியதனைத் தகடாகத் தட்டிநெய்ய
உறுதிபெற றுவியதூள் பலமுக்காலு
வெளியில்புளி மாதளையை யருத்துநீயும்
விரலாலே பிழிந்துவிரை தன்னைத்தள்ளி
கனிவாக வொழுகரையி னாள்மூன்றாற்றிக்
களிப்புடன் செந்தூரமாம் ஊரவைக்க
அளிவாக அரைத்துமுன்சார் தன்னிலேதான்
சுருதிபெறப் புடமூன்று சுகமாய்ப்போடே. (281)

போட்டெயெடு முருக்கம்பூப் போலேயாகும்
புகழாக வதையெடுத்துப் புறம்பாய்வைத்து
நாட்டியெடு தகடினிய காந்தம்காலு
நலமாகக் காணத்தின் கிஷாயத்தாலே
பூட்டியரை புடமூன்றில் சிவப்பேயாகும்
போக்கோடே பலம்காலு உளிசெந்தூரம்
மாட்டியிடை சேர்த்துக்கா ணக்கிஷாயம்
வகையாகச் சேர்த்தரைத்து வில்லைதட்டே. (282)

தட்டிக்கதிர் காயவைத்துப் புடமுமூன்று
தயவாகப் போட்டெடுத்துப் புறம்பாய்வைத்து
மூட்டியெடு கற்பூர சலாசத்துத்தான்
முனையவது பலம்காலு கரியிலிட்டு
தட்டியதை யூதிவிடு கடுமையாக
தனையெடுத்துக் கல்மதத்தை யிடையேசேர்த்து
விட்டிடுநீ பழச்சாறு விட்டரைத்து
வில்லைதட்டிக் கதிர்முன்னே வைத்திடாயே. (283)

முன்னேவைத்துப் பெரும்புடமாய்ப் போட்டெடுத்து
முனையவெந்தப் புடம்பாக வைத்துக்கொண்டு
சொல்லபடி கெந்தியது பலமிரண்டு
சொல்லவரி தாளகவன் லிங்கிரண்டு
நன்னயமாய்க் கல்வமிட்டு அரைகருப்பாம்
நாடியதிற் தந்திவிரை தோடுபோக்கி
கன்னமதாய் வருத்துபலம் ரெண்டுமிட்டு
கனிவாகப் பொடித்துயின்னங் கருதக்கேளே. (284)

அயக்கடுசு காந்தசெந் தூரம்நாலு
அவ்விடைக்குச் சலாசத்து கல்மதமுநாலு
நயமாகக் கெந்திரசம் தந்திநாலு
நாடியிதை வருத்துநன்றாய்க் கல்வத்திட்டு
இயல்பான வேர்க்கொம்பு மிளகுநாலு
யிதைநிறுத்து கெல்லியிடை கடுக்காய்த்தோலும்
செய்பாகம் வகைக்குரெண்டு பலமதாக
சேர்த்தரைக்கப் புகைநீரைச் செப்பக்கேளே, (285)

ஓமத்திராவகம்.

கம்பியுப்பு பலம்ரெண்டு ஓமம்நூறு
கதிபெறவே பாணிரெட்டி கடத்திலிட்டு
நம்பியதைத் திரிநாள்வை புளிக்கும்நன்றாய்
நாட்டியெடு வாலேதனை மூடிமண்ணை
தெம்பாகச் செய்துஅதை அடுப்பிலேற்றி
செயமாக யெரித்துப்புகை நீரைவாங்கி
சம்பமதாம் முன்செய்த மண்டூரத்தில்
தாக்கியரை சாமம்ரெண்டு தகமையாமே. (286)

அரைத்துக்கதிர் காயவைத்துப் பொடித்துமுக்கண்
அன்பான குடுக்கைதனில் வைத்துநீயும்
சிரித்துனடு மூவிரலாற் கொண்டதாரு
செம்மைபட நாளாறு கொடுத்துப்பாரு
குரித்திடுநீ புளிதள்ளி வெட்டைமேகம்
குணமாகும் கல்லடைப்பண் நீருங்கட்டி
பரித்துவிடு தந்திமே கங்கள்போகும்
பகலவனைக் கண்டபனி போலாம்பாரே. (287)

பிரமியங்கள் பித்தவெட்டை சொட்டுசீதம்
பெலனழிக்கும் நீராம்பல் பிரிந்துபோகும்
குணமான புண்ணாறும் லிங்கந்தன்னில்
குளிரணமும் அரிப்பெல்லாங் குடிவிட்டோடும்
திரமாகுங் கிரிச்சினங்கள் சொல்லாதோடும்
தீர்ந்துவிடு மண்ரோந் தின்றமபேர்க்கு
சிரந்தன்னில் கங்கைவைத்த நாதன்சொன்னார்
திடமான அவிழ்தமது செய்துபாரே. (288)

அக்கினியா மாந்தம்போம் செரியாமாந்தம்
அனல்பிறக்கும் அன்னம்ரெம்பத் தின்றுதேறு
திக்கினிய நரம்புகளு முறுக்குமேறும்
திறமான சன்னிதலை வலியுமேகும்
விக்கலது நாலுமது யேகும்நன்றாய்
விடுபடுங்காண் வாயுவெல்லா மீறிடாது
செக்கிலரை பட்டதுபோல் நசையுந்தீரும்
செப்பினார் யாகோபு திறமைதானே. (289)

நிமிளைச்சத்து

சுத்தென்ற நிமிளைதனைச் சொல்லக்கேளு
சரியான பொன்னிமிளை பலந்தானென்று
வித்தென்ற ரோமமது பலந்தானென்று
மெய்யாகப் பழச்சாற்றில் மூன்றுநாள்தான்
மத்தபடி ஊறவைத்துக் கழுவிப்பின்பு
வகையாக அரிதாரம் வங்கம்ரெண்டும்
சித்தென்ற பழச்சாற்றை விட்டரைத்து
சீர்பெறவே நிமிளைமேற் பொதிந்துகொண்டே. (290)

கொண்டவுடன் ரோமத்தைச் சுற்றியேதான்
குகைக்குள்ளே அரைப்பலம் பூநாகம்வைத்து
கண்டதொரு மயூரம் அரைப்பலம்பரப்பி
கனிவான வெண்காரம் பலங்கால்வைத்து
விண்டதொரு பொன்னிமிளைக் கவசம்வைத்து
விதமாக அதன்மேற்கால் பலந்தான்காரம்
துண்டாக அரைப்பல மயூரமிட்டு
துரிதமுடன் பூநீரு களஞ்சியோடே. (291)

போட்டேதான் பூநாக மரைப்பலத்தை
புகழ்பெறவே அதன்மேலே போட்டுவைத்து
தேட்டமுடன் குகைவாயி லோடுமூடி
தெரியாமல் மண்சீலை ஐந்துசெய்து
போட்டவுட னுலையில்வைத்து ஊதூஊது
புகழான பொன்னிமிளைச் சத்ததாகும்
நாட்டமுடன் யாகோபு சொன்னாரிந்த
நலமான வெண்கலம்போற் றகர்ந்துபோமே. (292)

போமென்ற நிமிளைச்சத்துச் சோதித்தேதான்
புகழாக பொன்னிறமா யியமாகும்
தாமென்ற நிமிளைசத்தை வெளியாய்ச்சொன்னேன்
தயவான வயித்தியத்திற் குருவிதாகும்
நேமென்ற நிமிளைச்சத்து மூடித்தாக்கொண்டால்
நிலையான வியாதியெல்லாம் நில்லாதோடும்
ஆமென்ற யாகோபு உறுதியாக
அரைத்திட்டா ருலகோர்கள் பிழைக்கத்தானே. (293)

நிமிளைச்செந்தூரம்.

வாச்சுதென்ற நிமிளைச்சத்துப் பலந்தானொன்று
வகையாக மூசையிலே யுருகும்போது
ஆச்சுதென்ற கருநாகம் பலந்தானொன்று
அடைவான தங்கமது பலந்தானொன்று
பாச்சுகின்ற தங்கமொடு வங்கம்ரெண்டு
பரிவாகக் கல்வத்திற் பொடித்துத்தூளாய்
ஏச்சலென்ற வீரமது பலந்தானொன்று
இதமான அமுர்தப்பால் விட்டுஆட்டே. (294)

விட்டாட்டிக் கோழிமலம் வெள்ளைகேளு
விரைவாகக் கால்பலந்தா னதிலேபோட்டு
இட்டமுடன் வாலைரசம் சவ்வுபோலாம்
இறமான சூதம்ரெண்டு பலமேவாரு
சட்டமுடன் மூன்றுநாள் பனியிற்போட்டு
சடைநாறிக் கெந்தகந்தான் பலமீராறு
அட்டதிசை புகழும்பொற் றலையின்சாற்றால்
ஆட்டியே மனோசிலைகாற் பலமும்போடே. (295)

ஆட்டியே வில்லைசெய்து ரவியிற்காய்ந்து
அப்பனே பொடிசெய்ய பின்பெடுத்து
தாட்டிகமா யதைக்குப்பி தன்னிலிட்டு
தயவாக வாலுகையில் மூன்றுநாள்தான்
போட்டுமே முத்தியும் நன்றாயிட்டு
புகழாக சலாகைகொண்டு சோதித்தேதான்
மூட்டிவிடு முனையிலே கரகரக்கும்
முன்சொன்னார் யாகோபு முறையாய்த்தானே. (296)

தானென்ற பதமிதுதான் பார்த்துஇந்த
சதிரான குப்பிதனை யுடைத்துவாங்கு
தேனென்ற நிமிளைச்செந் தூரந்தானும்
திறமான சிவப்புநிற மாயிருக்கும்
வானென்ற குன்றியிடை ஆவின்பாலில்
வளமாக உண்டிடவே மெய்புளிச்சல்
சானென்ற வயிற்றுக்குள் வந்ததோசம்
சதமான முகவாதச் சன்னிபோமே. (297)

அயச்செந்தூரம்.

அயத்தகடு பலமொன்று அந்திடைக்கு
அறியவே சூதமது கல்வத்திட்டு
செயவீரம் நவச்சார மொருபலந்தான்
திறமாக மூன்றுநாள் கைவிடாமல்
தயவோடு தானரைக்கச் சிவந்துபோகும்
தாட்டிகமாய்ப் புதுச்சட்டி யடுப்பில்வைத்து
நயமாக வருத்திடவே முருக்கம்பூப்போல்
நன்றாக வருகையிலே யெடுத்துக்கொள்ளே. (298)

எடுத்ததனைக் குன்றியிடை பனைவெல்லத்தில்
இயல்பாகக் கொடுத்தாக்கால் சூலைபோகும்
கடுத்தவொரு நசலெல்லாஞ் சொல்லாதோடும்
கருவாகு மிதின்சுருக்கு எதுக்குமில்லை
பிடிக்கவந்த யெமனுமே பயந்துபோவான்
பெலமான வியாதியெல்லாங் கடலேபுக்கும்
விடுத்துமே சொல்லிவிட்டார் யாகோபுதானும்
வேணுமென்ற செந்தூர முடித்துக்கொள்ளே. (299)

இந்தநூ லோடுமுன்னூர் பண்டிதங்கள்
இதமான கைபாக வயித்தியங்கள்
சுந்தரமாய்ச் சொல்லிவிட்டேன் தோய்ந்துபார்க்க
சுத்தரச வாதிகட்கு வெளியாய்த்தோன்றும்
எந்தவித நசைகளெல்லாம் கடலேபுக்கும்
எழுதிநேன் ஏழைதான் பிழைக்கவேண்டி.
முந்தவே சொன்னதொரு யெழுநூறுந்தான்
முற்றிலுமே கற்றறிந்தோன் வாதியாமே. (300)

புடபாகம்.

புடபாகம் செய்பாகம் யெரிப்புத்திட்டம்
புகழாக நூற்றியம்பதிலே சொன்னேன்
திடமாக வகைப்பார்த்தால் வெளியாய்த்தோணும்
செய்பாகம் புடபாகம் அறிந்துகொள்ளு
சடமான சுண்ணமுன்னூறும்பாரு
சமுசயங்க ளில்லையதில் வெளியாய்ச்சொன்னேன்
இடமான யென்னூலைக் கோர்வையாக
இயல்புடனே பார்க்கயாக் கோபுசொன்னோரே: (301)

வாதமது செய்வதற்கு யெழுநூறுபாரு
வயித்தியங்கள் செய்வதற்கு முன்னூறுபாரு
நீதமாய் சுண்ணமது செய்வதற்கு
நிலைத்தசுண்ணம் முன்னூறு நீதான்பாரு
சாதகமாய்ச் செந்தூரஞ் செய்வதற்கு
தடையின்றி முன்னூறுசெந் தூரம்பார்.
வேதவாக் கியம்போல யாக்கோபுதானும்
விரித்துரைத்தார் செந்தூர முன்னூறுமுற்றே. (302)

யாகோபு லோகச்செந்தூரம் 300

முற்றிற்று.



சிவமயம்.

# வயித்திய புஸ்தகங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அகஸ்தியர் கற்ப மூப்புக்குருநூல் 200 மனோன்மணி தீட்சை 100ம் சேர்ந்தது | 0 | 12 | 0 |
| 2. | ஷை பன்னீராயிரத்துக்குச் சூஸ்திரமான பன்னிருகாண்டம் | 0 | 12 | 0 |
| 3. | ஷை பரிபாஷை 300 (புதிது) | 0 | 14 | 0 |
| 4. | ஷை கௌமதி நூல் 400 புதியநூல் | 1 | 0 | 0 |
| 5. | ஷைபூரணம் 205 சூஸ்திரம் 21ம்சேர்ந்த | 0 | 12 | 0 |
| 6. | ஷை பூரண சூஸ்திரம் 216 | 0 | 12 | 0 |
| 7. | ஷை அமுர்த கலைக்கியானம் 1200 | 1 | 0 | 0 |
| 8. | ஷை பரிபூரணம் 1200 புதியநூல் | 2 | 8 | 0 |
| 9. | திருவள்ளுவர் கற்பம் 300 ஷைசுருக்கம் | | | |
| 10. | 100, ஷை50, ஷை30, ஷை16, ஷை 11, ஷை100 ஆக 7 சாஸ்திரங்கள் அடங்கியது | 1 | 4 | 0 |
| 11. | நந்தி நிகண்டு 300 | 0 | 14 | 0 |
| 12. | தன்வந்திரி வைத்திய குருநூல் 200 | 0 | 12 | 0 |
| 13. | சட்டமுனி ஞானம் 200 | 0 | 8 | 0 |
| 14. | கருவூரார் வாதகாவியம் 700 | 1 | 4 | 0 |
| 15. | இராமதேவர் வைத்தியகாவியம் 1000 | 1 | 8 | 0 |
| 16. | ஷை சிவயோகம் 200 | 0 | 8 | 0 |
| 17. | புலஸ்தியர் கற்பம் 300 | 0 | 14 | 0 |
| 18. | ஷை வாதசூஸ்திரம் 300 | 0 | 14 | 0 |
| 19, | கொங்கணர் நடுக்காண்டம் 500 | 1 | 0 | 0 |
| 20. | தமிழ் சித்தவைத்திய அகராதி | 2 | 0 | 0 |
| 21. | உரோமரிஷி பரிபாஷை 300 | 0 | 14 | 0 |
| 22. | பிரமமுனி கருக்கடை 380 | 0 | 12 | 0 |
| 23. | யூகிமுனிக்கும்மி 1000 பரிபூரணம் 200 இரண்டும் சேர்ந்தது | 2 | 8 | 0 |
| 24. | காகபுஜண்டர் பெருநூல்காவியம் 1000 | 2 | 8 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 25. | யாகோபு சிந்தாமணி 700 | 1 | 12 | 0 |
| | ஷை குருநூல் 55ம் சேர்ந்தது | 1 | 8 | 0 |
| 26. | ஷை சுண்ணக்காண்டம் 600 | 0 | 14 | 0 |
| 27. | ஷை சுண்ணம் 500 | | | |
| 28. | ஷை சுண்ண சூஸ்திரம் 150 அதற்கு | 0 | 12 | 0 |
| | சுருக்கம் 50 | 0 | 14 | 0 |
| 20. | ஷை லோக செந்தூரம் 300 } | | | |
| 30. | ஷை செந்தூரம் சூஸ்திரம் 150 } | 0 | 12 | 0 |
| | அதற்கு சூஸ்திரம் 50 | 1 | 4 | 0 |
| 31. | வாதசூஸ்திரம் 400 | 0 | 14 | 0 |
| 32. | ஷை பஞ்சமித்திரம் 300 } | | | |
| 33 | வைத்தியம் 300 சரக்கு சுத்தி } | 0 | 14 | 0 |
| | நாடி விபரமும் சேர்ந்தது | | | |
| 34. | ஷை வகாரக்களங்கு என்னும் | 0 | 14 | 0 |
| | வாதவைத்தியம் 300 | | | |
| 35 | ஷை தண்டகம் 110 இடைபாகம் 16 | 0 | 12 | 0 |
| | செய்பாகம் 16ம் சேர்ந்தது | | | |
| 36. | வைத்திய கல்லாடமும் ஷைசாஸ்திரம் | 1 | 4 | 0 |
| | 17க்கும் உரை சேர்ந்தது | | | |
| 37. | யாகோபு கோர்வை 17 சாஸ்திரங்களும் | | | |
| | அதன் அரும்பத உரையும் சேர்ந்த | | | |
| | ஒரே கட்டணம் கோர்வை கலிக்கோ | 10 | 0 | 0 |
| | பயிண்டு புஸ்தகம் விலை ரூ | | | |

## ஒன்பது விஷை ஆரூடம்.

38. 1. கெருடாருடம், 2. கெருடபஞ்சாட்சர ஆருடம்,
3. சத்தியாருடம், 4. மந்திராருடம், 5. சிவாருடம்,
6. தேவியாருடம், 7 நாகாருடம், 8 மந்திராருடம்.
9. சர்ப்பாருடம் மேற்கூறிய ஒன்பது ஆருடங்கள்
சேர்ந்த கலிக்கோ பைண்டுபெரியபுத்தகம் 1க்கு 2 8 (

## வைத்திய வாதயோக

# ஞான சாஸ்திரத் திரட்டு

## 10 பாகங்கள்.

### முதல் பாகம்

திருமூலர், தெட்சணாமூர்த்தி, கணநாதர், சுப்பிரமணியர், போகர் இவர்களால் கூறியசாஸ்திரங்கள் சேர்ந்தது

### இரண்டாவது பாகம்

போகர், காலாங்கிநாதர், கமலமுனிவர், இடைக்காட்டுச் சித்தர், புண்ணாக்கு சித்தர், கொங்கணர், குதம்பை சித்தர், அம்பிகானந்தர், டமரானந்தர், வால்மீகர், இவர்களால் கூறிய சாஸ்திரங்கள் சேர்ந்தது

### மூன்றாவது பாகம்

கடைப்பிள்ளை, ஜெய முனிவர், கல்லுளிச்சித்தர், கஞ்சமலைச்சித்தர், புலிப்பாணி முனிவர், கௌசிகமுனிவர், மிருகண்டமகாரிஷி, குருராஜர், இராமரிஷி, புசுண்டமகாரிஷி, மௌனசித்தர், சூதமாமுனி, இவர்களியற்றிய சாஸ்திரங்கள் சேர்ந்தது

### நாலாவது பாகம்

மச்சமுனிவர், வேதமுனிவர், துர்வாசமகாரிஷி, யூகிமுனிவர், வசிஷ்டர், பாம்பாட்டிசித்தர், ஞானச்சித்தர், சுகப்பிர்மரிஷி, கூர்மானந்தர், சூரியானந்தர், கண்ணானந்தர், அசுவனிதேவர் பராசரிஷி, தேரையர், இவர்கள் கூறிய சாஸ்திரங்கள் சேர்ந்தது

### ஐந்தாவது பாகம்

சுந்தரானந்தர், கடுவெளிசித்தர், சங்கிலிச்சித்தர், ஊர்வசி, பதஞ்சலியர், வியாக்கிரமபாதர், திரிகோணச்சித்தர், கொங்கணர், பரத்துவாசர், சங்கரர், வாரிஷி, சமதக்கினி மகாரிஷி, சச்சிதானந்தர், கடைப்பிள்ளை இவர்களால் பாடிய சாஸ்திரங்கள் சேர்ந்தது.

## ஆருவது பாகம்

இராமதேவர், யாகோபு, யோகச்சித்தர், வேதாந்தச்
சித்தர், பிரமமுனி, சங்கமுனிவர், தன்வந்திரி, கோரக்கர்
திலோர்த்தமை இவர்கள் கூறிய சாஸ்திரங்கள் சேர்ந்தது.

## ஏழாவது பாகம்

சட்டைமுனிவர், காலாங்கிநாதர், இராமதேவர், ஈஸ்
பரன், ஈஸ்பரி, பிடிநாக்கீசர், காசிபமுனிவர் ஜனகர்,
அகப்பை சித்தர், விளையாட்டுச்சித்தர் இவர்களால்கூறிய
சாஸ்திரங்கள் சேர்ந்தது.

## எட்டாவது பாகம்

உரோமரிஷி, சட்டைமுனிவர், ஜனகர், கலைகோட்டு
மகாரிஷி, அழுகணிச்சித்தர், நொண்டிச் சித்தர், கொங்க
ணர், இவர்களால் கூறிய சாஸ்திரங்கள் சேர்ந்தது.

## ஒன்பதாவது பாகம்

கருவூரார், கொங்கணர், ஆனந்த சித்தர், இமயகிரிச்
சித்தர், ஏகநாதர், சுந்தரானந்தர், இவர்களால் பாடிய
சாஸ்திரங்கள் சேர்ந்தது

## பத்தாவது பாகம்

அகஸ்தியர், சிவவாக்கியர், சூதமாமுனி, அசுவனி
தேவர், தொழுகண்ணர், சித்தானந்தர், கபிலர், வீரமா
முனிவர், கிருஷ்ணபகவான் இவர்களால் கூறிய சாஸ்
திரங்கள் சேர்ந்தது.

**பாகம் 1-க்கு விலை ரூ 1—8—0**

**குரு. இராமசாமிக்கோன்**
புத்தகஷாப், புதுமண்டபம் மதுரை,

